வெற்றி எட்டுத் திக்கும் எட்டக் கொட்டு முரசே!
வீரர் என்றும் வாழ்க என்று கொட்டு முரசே!

# தமிழ் முரசு

(மாதப் பதிப்பு)


| தொகுதி ங | சென்னை 1949 மே | பகுதி ரு |
|---|---|---|


## பொருளடக்கம்

★




# தமிழ் முரசு

திருவள்ளுவராண்டு ககூஅய சித்திரை


# மூவர் தீர்ப்பு

மொழிவாரி மாகாணப் பிரிவினை பற்றி ஆராய்வதற்காக, அரசியல் நிர்ணய மன்றம் 'தார் கமிஷனை' நியமித்ததும், அக்கமிஷன் பிரிவினைக்கு எதிராக அறிக்கை விடுத்ததும் அனைவரும் அறிந்ததே. 'தார் கமிஷன்' அறிக்கையால், காங்கிரஸ் வாதிகளிடையே தோன்றிய ஆத்திர உணர்ச்சி, ஜெயப்பூரில் கூடிய காங்கிரஸின் அமைதியைக் குலைத்துவிடும் போலிருந்தது. இந்த சங்கடத்தைச் சமாளிக்க காங்கிரஸ் மேலிடம், டாக்டர் பட்டாபி—சர்தார் பட்டேல்—பண்டித நேரு ஆகிய மூவரடங்கிய ஒரு சப் கமிட்டியை நியமிக்க நேரிட்டது. பட்டேலும் நேருவும் பிரிவினையை அங்கீகரித்தாலும், அதை அமுல் நடத்துவதைத் தள்ளிப்போட விரும்புபவர்கள் என்பதை நாடு அறியும். ஆனால், பிரிவினையில் அவசரம் காட்டி அதைப்பற்றி பிரசாரம் செய்வதைத் தனது அன்றாட வேலையாகக் கொண்டிருக்கும் டாக்டர் பட்டாபியும், கமிட்டியில் அங்கம் பெற்றிருந்ததால், அதன் முடிவு பிரிவினைக்குச் சாதகமாகவே இருக்குமென்ற நம்பிக்கை நாட்டில் நிலவியது. ஆனால், மூவர் கமிட்டியினர் அண்மையில் வெளியிட்டுள்ள அறிக்கை இந்த நம்பிக்கையை நாசம் செய்து விட்டது.

தார் கமிஷன், மாகாணப் பிரிவினையை ஏற்க மறுத்தது. அப்படிப் பிரிப்பது, தேசிய ஐக்கியத்தைச் சீர்குலைக்கும் செயலென்றும் பயமுறுத்தியது. ஆனால் மூவர் கமிட்டியோ, பிரிவினை செய்ய வேண்டியதன் அவசியத்தை ஒப்புக்கொள்கிறது. அந்த அளவுக்கு 'தார் கமிஷன்' கருத்திலிருந்து மூவர் கமிட்டி மாறுபடுகிறது. என்றாலும், பிரிவினையை உடனடிப் பிரச்னையாக ஒப்புக்கொள்ள முடியாது என்று மூவர் கமிட்டி கூறுகிறது.

எப்போதாவது மாகாணப் பிரிவினை செய்யும் காலம் வந்தால், அப்போது ஆந்திரப் பிரிவினையே முதலில் எடுத்துக் கொள்ளப் படும் என்று மூவர் கமிட்டி முடிவு செய்திருக்கிறது. மொழி வழி இன உணர்ச்சி எல்லா இனத்தவருக்கும் ஒன்று போலத்தான். அப்படியிருக்க, மாகாணங்களை 'கியூ' வரிசையில் நிற்க வைத்து, அதில் ஆந்திரா வுக்கு மட்டும் முதலிடம் தருவது அர்த்தமற்ற போக்காகும். ஆந்திரப் பிரிவினையை விட, கேரளப் பிரிவினை மிகச் சுலபமானது. ஏற்கனவே திருவிதாங்கூர் கொச்சி இணைப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டது. இனி, சென்னை மாகாணத்திலுள்ள மலபார் ஜில்லாவை அதனோடு சேர்த்துவிட்டு, தென் திருவிதாங்கூரைப் பிரித்து தமிழகத்தோடு பிணைத்து விட்டால், ஐக்கிய கேரளம் உருவாகி விடும். இவ்வளவு சுலபமான ஒன்றை ஆந்திரப் பிரிவினைக்கு அடுத்தபடியில் வைப்பதை நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை. !

எந்தக் காலத்திலாவது மாகாணங்களைப் பிரிக்கத் துவங்கினால், அப்போதும் எல்லைகளைத் திருத்தி அமைக்கும் வேலையை மேற்கொள்ள முடியாதென்று மூவர் கமிட்டி கூறுகிறது. மொழிவழி மாகாணக்கோரிக்கை, இனப்பற்றால் எழுந்ததே ஒழிய பதவி மோகத்தால் அல்ல. எனவே, ஒரு மொழிக்குரிய பிரதேசத்தை தனி அரசு மாகாணமாகச் செய்யும்போது, அதன் எல்லைப் பிரதேசங்களைப்பற்றிய பிரச்னைகளையும் அப்போதே தீர்த்தாக வேண்டும். மாகாணப் பிரிவினை ஏற்படும்போதே, அவற்றின் எல்லைகளை வரையறுக்காவிடில், பிரிக்கப்படும் மாகாணங்களிடையில் எல்லைச் சண்டைகள் ஓயாமல் ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். வடக்கே, வங்காளத்துக்கும் அஸ்ஸாமுக்கும் அடிக்கடி ஏற்பட்டுவரும் எல்லைச் சண்டைகளையே இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

'ஆந்திரப் பிரிவினையை அமுல் நடத்த வேண்டுமானால், அதன் தலைவர்கள் சென்னை நகரைக் கோருவதைவிட்டுவிட வேண்டும்' என்று மூவர் கமிட்டி நிபந்தனை போடுகிறது. இதைக்கண்டு, தமிழரிலே பலர் ஆனந்தப்படுகின்றனர். உண்மையில் சென்னை தமிழருக்கே உரியதென்று ஆகுமானால், அதற்காக மகிழ்ச்சியடைவோர் நம்மைவிட வேறு யாரும் இருக்க முடியாது. ஆனால், சென்னை நகரைப்பற்றி கமிட்டியினர் வெளியிட்டுள்ள கருத்து தெளிவாக இல்லை. ஆந்திரர்கள், சென்னை நகரைக் கேட்பது அநியாயமென்று கமிட்டி கூறவில்லை. சென்னையைப்பற்றிய, ஆந்திரர்களின் தாவா பின்னொரு காலத்தில் ஆலோசிக்கப்படலாம் என்று கமிட்டி வாக்குறுதி கொடுக்கிறது. எனவே, சென்னையைப்பற்றிய தகராறு தள்ளி வைக்கப்படுகிறதே ஒழிய, அந் நகரம் தமிழருடையதுதான் என்று தீர்ப்பளிக்கப்படவில்லை.

"மாகாணப் பிரிவினை வேலையைத் துவங்கும் காலத்தில், ஆந்திரப் பிரிவினை முதலில் கவனிக்கப்படும்" என்றே கமிட்டியின் அறிக்கை கூறுகின்றது. ஆனால், மூவர் கமிட்டி உறுப்பினர்களில் ஒருவராகிய டாக்டர் பட்டாபி, "ஆந்திரர்கள் சென்னையைக் கேட்பதில்லை என்று வாக்குறுதி தந்தால் ஆந்திர மாகாணப் பிரிவினை வேலை உடனே ஆரம்பமாகிவிடும்" என்று கூறுகிறார். அவரது கூற்றுப்படி ஆந்திரம் பிரிக்கப் பட்டாலும் அப்போதும் தமிழருக்கு தனி மாகாணம் அமைந்து விடப்போவதில்லை. ஆந்திரம் நீங்கலாக மலையாளம், தென் கன்னடம், தமிழகம் ஆகிய மூன்று பகுதிகளும் 'சென்னை மாகாணம்' என்ற பெயரால், ஒரே அரசின் கீழ்தான் இருந்து வரும்.

சென்னை நகரப் பிரச்னையை, ஆந்திரர் அடியோடு கைவிட்டு விட்டாலும் கூட, அதனால் நாம் மகிழ்ச்சி அடைவதற்கில்லை. ஏனெனில், ஆந்திரர்கள் தங்கள் தவறான கோரிக்கையைக் கைவிடுவதற்காக, தமிழர் சித்தூர் ஜில்லாவைப் பறி கொடுக்க வேண்டியிருக்கிறது. எல்லைப் பிரச்னைகள் பின் ஒரு காலத்தில் எடுத்துக் கொள்ளப் படலாம் என்று கமிட்டி தரும் வாக்குறுதியின்படி, சித்தூர் ஜில்லாவை தமிழர் பின் ஒரு காலத்தில் வற்புறுத்திப் பெற முடியும் என்று நம்புவதற்கில்லை. சித்தூர் தமிழ்ப்பகுதிகள் உள்பட, ஆந்திர மாகாணம் தனியாக்கப்பட்டு ஆந்திர அரசும் அமையுமானால், சித்தூரில் இங்குமங்குமாக உள்ள இரண்டொரு தமிழ்ப் பள்ளிகளும் எடுக்கப்பட்டு விடும். அந்தப் பிரதேசம் தமிழருக்குரியது என்று கூறுவதற்கான ஆதாரங்களெல்லாம் அழிக்கப்பட்டுவிடும். எனவே, 'சென்னை பிழைத்து விட்டது' என்று மகிழ்ச்சியடைவோர் சித்தூர் பறிபோய் விட்டது என்பதையும் மறந்து விடக்கூடாது.

மூவர் கமிட்டி அறிக்கையில், தமிழர் மகிழ்ச்சி யடைவதற்கான விஷயம் ஒன்று உண்டெனில், அது பம்பாயைப் போன்று சென்னையைத் தனி மாகாணமாகச் செய்யப் போவதில்லை என்ற விஷயமேயாகும். சென்னை நகரை ஆந்திரர்கள் அபகரித்துக் கொண்டு விடுவார்களோ என்ற அச்சத்தைவிட, அது தனி மாகாண மாக்கப்படலாம் என்ற அபாயமே அதிகமாக இருந்தது. அந்த அபாயத்தைப் போக்கியதற்காக மூவர் கமிட்டியினருக்கு நமது பாராட்டைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இந்த மூவர் கமிட்டி அறிக்கையும் முடிவானதல்ல. மொழிவழிப் பிரிவினைக் கிளர்ச்சி எவராலும் தடுக்க முடியாத அளவுக்குத் தலைதூக்கி விட்டது. மொழிவாரி சுதந்தரக் குடியரசுகள் என்ற அடிப்படையில், ஒரு அகில இந்திய இயக்கம் உருவாகும் நாளும் அதிக தூரத்தில் இல்லை. பிரிவினையைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வருகிறவர்கள், தங்க

ளுக்கோ, அல்லது இந்தியாவுக்கோ நன்மை செய்யவில்லை என்பதை எதிர்காலம் உறுதிப்படுத்தும். மாகாணப் பிரிவினை தள்ளிப் போடப்பட்டதைக் கண்டு தமிழரசுக் கழகத்தார் சோர்வடையப் போவதில்லை. கழகம் கோருவது மத்திய ஆதிக்கத்துக்குட்பட்ட தமிழ மாகாணமல்ல. சுதந்தர சோஷியலிஸத் தமிழரசேயாகும். அந்த அரசைக் காண தமிழர் இன்னும் எவ்வளவோ பாடுபட வேண்டியிருக்கின்றது. மூவர் கமிட்டி அறிக்கை, நாம் எத்தகைய கேவல நிலையில் இருந்து வருகிறோம்; நம்மை ஆள்பவர்கள் நமது கோரிக்கையை எவ்வளவு அலட்சியமாகப் புறக்கணிக்கிறார்கள் என்பதை நன்கு வெளிப்படுத்தி விட்டது. இனி தமிழருக்குள்ள ஒரே கடமை, சுதந்தரத் தமிழரசுக்காகப் பாடுபடுவதேயாகும்.

## போர் புகைந்தது!

திருவிதாங்கூரில் தமிழர் அறப்போர் துவங்கினர். திருவிதாங்கூர் தமிழகம், சென்னை மாகாணத்தோடு சேர்க்கப்பட வேண்டும் என்பதே அந்த அறப்போரின் அடிப்படைக் கருத்து. திருவிதாங்கூர் தமிழரின் எதிர்ப்பைப் புறக்கணித்து, மலையாள சமஸ்தானங்களை இணைத்ததால் ஏற்பட்ட ஆத்திரமும் திருவிதாங்கூர் தமிழர் போரிலிறங்குவதற்கு மற்றொரு காரணமாயிற்று. திரு. நத்தானியல் உள்பட, வீரத் தமிழர் பலரை சிறையில் தள்ளினர் மலையாள அரசினர். சட்டத்தை மீறிய தொண்டர்களைத் தடிகொண்டு தாக்கிப் படுகாயப் படுத்தினர் மலையாளப் போலீசார். எந்த தேசியக் கொடியை மலையாளக் காங்கிரஸ் வாதிகள் மதிக்கின்றார்களோ அதே தேசியக்கொடி, தமிழன் கையில் இருந்த பாவத்திற்காக அவமதிக்கப்பட்டது. திருவிதாங்கூர் தமிழர்கள், மலையாளிகளின் கொடுமைகளை சகித்துக்கொண்டு உரிமைப் போரை உணர்ச்சி கொண்டு நடத்தினர். ஆனால், பட்டேலின் கட்டளைப்படி, திரு. காமராஜர் திருவிதாங்கூருக்குப் பறந்து சென்று போராட்டத்தை நிறுத்துமாறு தமிழர் தலைவர்களைக் கட்டாயப்படுத்தினார். அதில் வெற்றியும் பெற்றார். சத்தியாக்கிரக நிறுத்தத்திற்குப் பிறகு, திரு. காமராஜர் ஒரு அறிக்கை விடுத்துள்ளார். அதில் திருவிதாங்கூர் தமிழர் கோரிக்கையை சர்தார் பட்டேலோ, அல்லது திருவிதாங்கூர் அரசாங்கமோ ஓரளவேனும் ஒப்புக் கொண்டதாகத் தெரிவிக்கவில்லை. திருவிதாங்கூர் தமிழகத்தை காங்கிரஸ் வேலைக்காக மட்டும் சென்னை மாகாணத் தமிழகத்தோடு சேர்க்கும் விஷயத்தில் பாடுபடுவதாக திரு. காமராஜர் வாக்குறுதி தருகிறார். ஆனால் திருவிதாங்கூர் தமிழர் சத்தியாக்கிரகம் தொடங்கியது, 'காமராஜர் தலைமையின் கீழ் உள்ள காங்கிரசோடு ஐக்கியமாவதற்கு அல்ல. அந்தக் கொள்கைக்கு அவர்கள்

எதிரிகளல்லர். என்றாலும், அதற்காக கடுஞ்சிறை புகுந்து கஷ்டப்படும் ஒரு போராட்டத்தி லிறங்க, அவர்கள் விரும்பியிருக்க மாட்டார்கள். போராட்டம் துவங் கியது சுய நிர்ணயக் கொள்கை ஒன்றுக்காகவேயாகும். அதில், திருவிதாங்கூர் அரசாங்கத்தா ரோடோ அல்லது சர்தார் பட் டேலுடனே கலந்து பேசி, ஒரு பகிரங்க வாக்குறுதியைப் பெற்ற பிறகு, சத்தியாக்கிரகத்தை நிறுத் தச் செய்திருப்பாராயின் திரு. காமராஜரை நாம் பாராட்டியிருப் போம். அவர் அப்படிச் செய்யாத தோடு, திருவிதாங்கூர் தமிழரின் போராட்டத்தை முறியடிப்பதி லேயே கவனம் செலுத்தினர். திரு. காமராஜரின் தலையீட்டின் பேரில் திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரசார் போராட்டத்தை நிறுத்தியது வருந்தத் தக்கதே. என்றாலும், அவர்களை நாம் குறை கூற விரும்பவில்லை. சென்னை மாகாணத் தமிழகத்தார் போதிய அளவுக்கு ஆதரவு காட்டாத நிலையிலும் தாயகத்தோடு சேர வேண்டும் என்று துடிப்பதற்காக திருவிதாங்கூர் தமிழர்களை நாம் பாராட்டத்தான் வேண்டும். ஆனால், இனியேனும் தங்களைப் பலப்படுத்திக் கொள்ளாத நிலையில், போராட்டத்தில் இறங்குவதோ, இறங்கிய இரண்டாம் நாளிலேயே ஒரு தனி மனிதரின் வேண்டுதலுக்காக நிபந்தனையின்றி நிறுத்துவதோ நடவாதென்று நம்புகிறோம். திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரசார் அடுத்தபடியாகச் செய்ய வேண்டிய வேலை, தங்கள் ஸ்தாபனத்தைப் பலப்படுத்திக் கொள்வதேயாகும்.

தமிழ்நாட்டு தலைமைப் பீடத்தின் தயவை நாடுவதைவிட, தமிழ் மக்களின் ஆதரவைத் தேடுவது, அவர்களது அவசரக் கடமையாகும். அதைச் செய்ய முனைந்தால், தமிழர் தங்கள் பூரண ஒத்துழைப்பை அவர்களுக்குக் கொடுப்பர் என்பதில் ஐயமில்லை. போர் புகைந்து விட்டாலும், அந்தப் போரின் துவக்க நாட்களில் துணிச்சலுடன் பங்கு கொண்ட திருவாளர்கள் ஆர். கே. ராம், காந்திராமன், பி. எஸ். மணி முதலிய வீர இளைஞர்களையும், அவர்களது தலைவர் திரு. நத்தானியலையும் பாராட்டுகிறோம்.

---

அட்டைப் படம்:

## சுரண்டல் பூச்சி !



"நானும் நீயும் ஒரே இனம்" என்று
நயமுடன் பேசித் தமிழர் உழைப்பைத்
தானும் தன்னவர் சூழச் சுரண்டித்
தந்திரமாய்ப் பிறர் வாழ்வது போலே,—
வானும் சிறக்க எழில்ஒளி வீசும்
மலரிதழ் போலவே மாய நிறத்தில்
காணும் சிறகை விரித்துப் பதுங்கித்
தேனை உறிஞ்சிக் கொழுத்திடும் பூச்சி!

# யான் கண்ட இலங்கை

ம. பொ. சி.

இலங்கைத் தீவைக் காண வேண்டுமென்ற ஆவல் எனக்கு நெடு நாட்களாக உண்டு. சோழ அரச பாம்பரையின் வரலாற்றைப் படிக்கும் போதெல்லாம் அந்த ஆவல் அதிகப்பட்டு வந்தது. இன்று இலங்கை, அரசியலில் தமிழகத்திற்கு அந்நிய நாடாகக் காணப்படினும் முன்காலத்தில் ஒரு நூற்றாண்டுக்கு மேலாகவே அது சோழ சாம்ராஜ்யத்தில் அடங்கியிருந்தது. கலாச்சாரத்தில் இலங்கை தமிழகத்தோடு கொண்டிருந்த தொடர்புக்கு எத்தனையோ சான்றுகள் உள்ளன.

சுமார் 1800 ஆண்டுகளுக்கு முன்பு சேரமன்னன், கண்ணகி தேவிக்குச் சிலை எடுத்து வணங்கியபோது சிங்கள வேந்தனான கயவாகு என்பானும் சேர நாடடைந்து அவ்விழாவில் பங்கு கொண்டதாக சிலப்பதிகாரம் கூறுகிறது. அது மட்டுமல்ல. தமிழ் நாட்டு வீராங்கனையாகிய கண்ணகிக்கு இலங்கைத் தீவின் பல பாகங்களிலும் கோயில்கள் கட்டச் செய்தான் கயவாகு மன்னன். பௌத்த மதத்தினராகிய சிங்களவர்கள் வணங்கும் பத்தினித் தெய்வம், நம் வீரக் கண்ணகியேயன்றி வேறல்ல.

வாணிபத்திலும் இலங்கை பண்டு தொட்டு இன்றுவரை இந்தியத் தமிழகத்தோடு இடைவிடாத தொடர்பு கொண்டிருக்கிறது. காவிரிப்பூம் பட்டினத் துறைமுகத்தில், உணவு வகைகளும் வாசனைத் திரவியங்களும் ஈழ நாட்டிலிருந்து வந்து இறக்குமதியானதாக "பட்டினப்பாலை" பகருகின்றது. இன்று இலங்கைத் தீவின் வளத்திற்காக இந்தியத் தமிழன் உழைத்துவரக் காண்கிறோம். ஆனால், பண்டைக் காலத்தில் — தமிழன், தனியரசு செலுத்திய காலத்தில் — செந்தமிழ் நாட்டின் வளத்திற்குச் சிங்களவர்கள் வந்து உழைத்ததாக நம் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. சோழ வேந்தன் கரிகால் வளவன் 12000 சிங்களப் பாட்டாளி மக்களைக் கொண்டு வந்து காவிரிக்குக் கரை கட்டிய தொன்றே இதற்குச் சான்றாகும்.

இந்தியா — இலங்கை ஆகிய இருநாடுகளின் உறவு என்பதெல்லாம், தமிழகம்—இலங்கை உறவு என்பதேயாகும். வட இந்தியா

வுடன் இலங்கைக்குள்ள தொடர் பெல்லாம் மத வழிப் பட்டதே யாகும். வடக்கே தோன்றிய புத்த மதத்தைத்தான் இலங் கைச் சிங்களவர் பின்பற்றுகின் றனர். வடக்கே புத்த மதத்தின் மீது ஆரியர்கள் போர் தொடுத்த போது அதற்கு அடைக்கலம் தந்தது நம் அருமைத் தமிழ் நாடேயாகும். தென்னாட்டின் வழியாகத்தான் புத்தமதம் இலங்கைக்கு ஏற்றுமதியாகி யிருக்க வேண்டும்.

இவ்வாறு வரலாற்றுக்கு முற் பட்ட காலந் தொட்டு இன்று வரை தமிழகத்தோடு இலங்கை எல்லா வகையிலும் தொடர்பு கொண்டிருப்பதன் காரணமாக 'இலங்கை வேறு, தமிழகம் வேறு' என்ற எண்ணம் என் மனத்தில் இடம் பெறவில்லை.

இலங்கைக்கு வருமாறு அங் குள்ள சில அரசியல் தோழர் களும் இலக்கிய நண்பர்களும் என்னை அடிக்கடி அழைத்த துண்டு. என்றாலும், அப்போ தெல்லாம் எனக்குச் சந்தர்ப்பம் கைகொடுக்கவில்லை. இப்போது இலங்கை காந்திய சேவா சங்கத் தார், ஒருமாத காலத்திற்கு இலங்கை முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்ய வர வேண்டு மென்று எனக்கு அழைப்பு விடுத்தனர். கட்சி அரசியலில் ஈடுபடாது காந்தியப் பணிபுரியும் அச் சங்கத்தினரின் அழைப்பு யான் எல்லா வகையிலும் ஏற்கத் தக்கதா யிருந்தது.

இலங்கை காந்திய சேவா சங் கத்தார் என்னை அழைப்பதற்குக் காரணமாக இருந்தவர் சென்னை "பிரசண்ட விகடன்" துணை யாசிரியர் திரு. அ. இளங்கோவன் ஆவார். என்னை எப்படியேனும் இலங்கைக்கு அழைத்துச் சென்றுவிட வேண்டுமென்று அவர் விடா முயற்சி செய்து வெற்றியும் பெற்றார்.

ஏப்ரல் 4ந் தேதி பகல் பன்னி ரண்டரை மணிக்கு 'ஏர் சிலோன்' விமான மூலம் நண்பர் இளங்கோவனுடன் இலங்கைக்குப் பயணமானேன். என்பால் பேரன்பு கொண்ட சென்னை நண்பர் திரு. பி. கே. பொன்னுசாமி அவர்களும் எனது உடல் நலத்தைக் கவனித் துக் கொள்வதற்காகவே தனது சொந்தச் செலவில் எங்களுடன் பயணமானார்.

யான் வான வெளியில் சஞ்ச ரிக்கும்போது சாளரத்தின் வழி யாகப் பூமியின் இயற்கை அழ கைக் கண்டு களித்தேன். விமா னம் இந்தியத் தமிழகத்தின் எல்லையைத் தாண்டி இலங்கைத் தமிழகமாகிய யாழ்ப்பாணத்தின் எல்லையை நெருங்கும்போது என் உள்ளத்தில் மட் டற்ற மகிழ்ச்சி பொங்கியது. வான வெளியில் பறந்த வண் ணம் என் தாய்நாட்டின் இயற்கை அழகைப்பார்த்தது இது மூன்றும் தடவை.

(தொடரும்)

# மூவர் கமிட்டி அறிக்கை



தார் கமிஷன் அறிக்கையைப் பரிசீலனை செய்ய, ஜெயப்பூர் காங்கிரஸ் நியமித்த (பண்டித நேரு— பட்டாபி— பட்டேல் கொண்ட) மூவர் கமிட்டி அறிக்கையின் சுருக்கம் வருமாறு :—

சுதந்தரம் கிடைத்தபின் ஏற்பட்டுள்ள புதிய நிலைமையை யொட்டி மொழிவாரி மாகாண அமைப்புக் கோரிக்கையை ஒரு புதுக் கண்ணோக்குடன் ஆராய வேண்டியது அவசியம். நாட்டின் பாதுகாப்பு, ஒற்றுமை, பொருளாதாரம் ஆகியவற்றையே நாம் முதன்மையாகக் கவனிக்க வேண்டும். பிரிவினை மனப்பான்மைகளுக்கு ஊக்கமளிக்கக் கூடாது. ஆகவே, மொழிவாரி மாகாணம் அமைப்பது என்ற காங்கிரசின் பழைய கொள்கையின் ஒவ்வொரு அம்சத்தையும் தனித்தனி ஆராய்ந்த பின்னரே அதை நிறைவேற்ற முடியும். நாட்டின் அரசியல், பொருளாதார கட்டுக்கோப்பை குலைக்கக்கூடிய நிர்வாகச் சீரழிவுகளோ, சிக்கல்களோ ஏற்படாமல் பார்த்துக் கொள்வது அவசியமாகும். இத்தகைய மிக முக்கியமான விஷயங்களில் கவனஞ் செலுத்துவதற்காக மொழிவாரி மாகாணப் பிரிவினைப் பிரச்னையை சில ஆண்டுகளுக்கு ஒத்தி வைப்பதை நாங்கள் ஆதரிக்கிறோம்.

## ஆபத்து; ஆதரிக்கமாட்டோம்!

சென்ற சில ஆண்டுகளாக மொழிவாரி மாகாணக் கோரிக்கை மட்டுமல்லாமல், மாகாண எல்லைகளை சில இடங்களில் திருத்தி அமைக்க வேண்டும் என்ற கோரிக்கையும் எழுந்திருக்கிறது. இதிலே உள்ள சில அபாயங்களை நாம் உணர வேண்டும். மொழிவாரி மாகாணங்களிடையே தெளிவான—நிலையான ஒரு எல்லைக் கோட்டை நிர்ணயிப்பது எளிதல்ல. எல்லைப் புறங்களில் இரு மொழிகளும் பேசக்கூடிய பகுதிகள் பல இருக்கலாம். இதனால் எல்லைக் கோட்டை நிர்ணயிப்பதில் தகராறு ஏற்படலாம். இதை யொட்டி பொதுமக்களிடை ஆத்திரம் மூளும். இதனால் யாருக்கும் நன்மை விளையாது.

நிலைமை உறுதியான பின்பு, நாடு இன்னும் அமைதியாக இருக்கும் போது எல்லைகளைத் திருத்தி அமைப்பதையோ, புது மாகாணங்களை அமைப்பதையோ சமரசமாகவும் பயனுள்ள வகையிலும் செய்து கொள்ளலாம். இன்று இந்தியாவில் அத்தகைய அமைதி இல்லை. ஆகவே, பிரிவினை வேறு காரணங்களைக் கொண்டு தவிர்க்க முடியாததாக இருந்தாலொழிய நாங்கள் பிரிவினைக்கு சிபாரிசு செய்வதற்கில்லை.

ஆனால்,.......

ஆனால், ஒரு பகுதியில் மொழிவாரி மாகாண அமைப்புக்காக விரிவான அடிப்படையில் பொதுமக்கள் ஆதரவு அதிகப்பட்டு வருமானால், ஒரு ஜனநாயக சர்க்கார் அதற்குப் பணிந்தேயாக வேண்டும். ஆனால், அரசாங்கத்திற்கு ஆபத்தோ, இக்

கோரிக்கைக்கு எதிரான உணர்ச்சிகளோ ஏற்படாமலிருக்க வேண்டியது முக்கியமாகும். ஒரு மாகாணத்தில் மட்டும் மக்கள் ஆதரவிருந்தால் போதாது. பக்கத்திலுள்ள மொழிவாரி மாகாணங்களின் சம்மதத்தையும் கவனித்தாக வேண்டும். உதாரணமாக, மகாராஷ்டிர மாகாண அமைப்புப் பிரச்னை, அதனுடேயே கர்னுடக மாகாணப் பிரச்னையையும் கிளப்புகிறது. ஆந்திரா மாகாண அமைப்புப் பிரச்னை, சென்னை நகரம் பற்றிய பிரச்னையையும், அத்துடன் கர்னுடக மாகாண அமைப்பு பற்றிய பிரச்னையையும் எழுப்புகிறது. இந்த மூன்று (ஆந்திர, கர்னுடக, மகாராஷ்டிர) புதுமாகாணங்களை யொட்டி ஹைதராபாத் இருப்பதால், அதைப்பற்றிய பிரச்னையும் இவற்றேடு தலைதூக்கும். ஒன்றுக்கு சலுகை காட்டினுல், மற்ற இரண்டும் சலுகைகளைக் கோரும். இதையெல்லாம் உத்தேசித்து புது மாகாணங்களை அமைப்பதற்கு இது தருணமல்ல என்று நாங்கள் கருதுகிறேம். புது மாகாணங்களை அமைப்பது நமது வெற்றிகளை ஸ்திரப்படுத்தும் வேலைகளைப் பாதிக்கும். அது மட்டுமல்ல; நமது நிர்வாக, பொருளாதார, நிதி கட்டுக்கோப்புகளைத் தகர்த்து விடும். விஷம சக்திகள் தலைதூக்க ஏதுவாகி விடும்.

ஆனுல், பொதுஜன வற்புறுத்தல் மிக அதிகமாக இருந்து வருமாயின் இந்தக் கோரிக்கையை ஏற்பது அனுபவ சாத்யமானதா என்பதை ஆராய்ந்தாக வேண்டும். மாகாண எல்லைகளைத் திருத்தி அமைக்கும் பிரச்னையைக் கிளப்பக் கூடாதென்பதே கமிட்டியின் கருத்து. இந்தக் கோரிக்கைகள் பொருளற்றவை என்று நாங்கள் கருதுவதாக எண்ணக்கூடாது. சிற்சில மாகாணங்களின் எல்லை திருத்த கோரிக்கை நீதியானதே. ஆனுல், அந்தக் கோரிக்கையை இப்போது கிளப்பக் கூடாது. அப்படிக் கிளப்புவதால் நன்மைக்கு பதில் தீமையே நேரும்.

நம்முன் உள்ள முக்கிய பிரச்னை தென் இந்தியாவில் ஆந்திர, கேரள, கர்னுடக, மகாராஷ்டிர மாகாணங்கள் அமைப்பது பற்றியேயாகும். இந்த மாகாண கோரிக்கைகளுக்கு பலமான ஆதரவும் இருக்கிறது. இதில் நியாயமும் இருக்கிறது. குறிப்பாக, கேரளமும், கர்னுடகமும் பல மொழிகள் கொண்ட மாகாணத்துடன் சேர்ந்திருந்ததால் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளன என்று நாங்கள் கருதுகிறேம். புது மாகாணங்கள் அமைப்பதில் நிர்வாக பளு அதிகரிக்கும். சிற்சில பகுதிகளில் நிர்வாகத்தின் தரமும் குறைய நேரும்.

கேரள, கர்னுடக மாகாணங்கள் விஷயம்பற்றி பக்கத்திலுள்ள சமஸ்தானங்கள் பிரச்னையில் ஒரு முடிவு ஏற்படாத வரையில் இந்தப் புது மாகாணங்கள் அமைப்பது முடியாத காரியம். அந்த சமஸ்தானங்கள் பக்கத்து மொழிவாரி மாகாணத்துடன் சேர சம்மதப்பட்டுவிட்டால்,பிரச்னை எளிதாகி விடும் இதிலும், மொழிவாரியாக தகராறில் உள்ள இடங்களை விட்டுவிட வேண்டும். புதிதாக அமைக்கப்படும் எல்லைகள், பரஸ்பர சம்மதத்தோடு, தகராறுகள் எதுவும் இல்லாமல் அமைக்கப்பட வேண்டும். மகாராஷ்டிர மாகாணத்துக்கும் இதே வாதம் பொருந்தும்.

### பம்பாய் தனி 'யூனிட்'

பம்பாய் நகரத்தின் பிரச்னைபற்றி விவாதித்தாகி விட்டது. இந்தியாவின் முக்கியமான நகரங்களில் இது

ஒன்று என்பதோடு பலதரப்பட்டவர்களும், பல்வேறு மொழி பேசுகிறவர்களும் வசிக்கும் நகரம் இது. வர்த்தகத்தின் தலைமையிடம் இதுவே. வெளிநாடுகளுக்கும் இந்தியாவுக்குமிடையே ஜன்னல் போன்றது. இந்த நகரத்தை, குறிப்பிட்ட ஒரு மொழிக்குரிய மாகாணத்தின் நகராக நாங்கள் கருத முடியாது. அப்படி அதை ஒரு தனி மாகாணத்தோடு சேர்ப்பது இப்போது அது வகித்து வரும் அந்தஸ்தை வெகுவாகப் பாதிக்கும். பம்பாயில் மகாராஷ்டிரர் சிறுபான்மையினரே. சென்ற சில ஆண்டுகளில் பம்பாய் நகரின் மக்கள் தொகை மிகவும் அதிகரித்திருக்கிறது. மகாராஷ்டிரர் அந்த நகரத்தில் கிட்டதட்ட பெரும்பான்மையினராகவே இருந்தபோதிலும், அந்த நகரத்தின் பொதுத்தன்மையைக் கவனிக்கும்போது அது ஒரு பிரமாத விஷயமே அல்ல.

ஆகவே, தற்போதைய பம்பாய் மாகாணத்தைப் பிரித்து தனி மகாராஷ்டிர மாகாணம் அமைப்பதானால், பம்பாய் நகரம் தனி அரசியல் யூனிட்டாகக் கருதப்பட வேண்டும். காங்கிரஸ்கூட, தன் அமைப்பில் மகாராஷ்டிர, கர்னாடக, மாகாணங்கள் அமைத்தபோது, பம்பாய் நகரைத் தனி மாகாணமாகவே அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதற்கிடையே பம்பாய் நகர எல்லைகள் விஸ்தரிக்கப்பட வேண்டியது அவசியம். பிரிவினை செய்வதானாலும், பம்பாய் நகரைப் பெரிதாக்குவது அவசியமாகும். வணிகர்களின் அச்சத்தைப் போக்கி, 'பம்பாய் எந்த மாகாணத்துடனும் சேர்க்கப்படாமல், தனி யூனிட்டாகவே இருக்கும்' என்பதைத் தெளிவு படுத்துகிறோம்.

## சென்னை ஆந்திரருக்கில்லை

மொழிவாரி மாகாண கோரிக்கைகளில், மற்ற எல்லாவற்றையும்விட ஆந்திர மாகாணக் கோரிக்கைக்கே அதிக ஆதரவு இருக்கிறது. ஆனாலும், சிற்சில பிரதேசங்கள் குறித்தும் சென்னை நகரம்பற்றியும் தகராறுகள் இருக்கின்றன. பம்பாய் நகரம் பற்றி நாங்கள் கூறியவை சென்னை நகருக்கும் ஓரளவு பொருந்தும். ஆனால், குறிப்பிடத்தக்க வித்தியாசமும் இருக்கிறது. பம்பாய் நகரம் பல்வேறு இனத்தின் சாதியினர் வசிப்பதையும், தொழில் வளம் மிகுந்திருப்பதையும் முன்னிட்டு அதைத் தனி அரசியல் யூனிட் ஆக்கிவிடலாம். ஆனால், சென்னை நகரமோ சிறியது. மாகாணத்தின் வாழ்விலும் நடவடிக்கைகளிலும் அது நெருங்கிய தொடர்புடையது.

ஆகவே, ஆந்திர மாகாணம் அமைப்பதானால், அதைவலியுறுத்துகிறவர்கள் சென்னை நகரைப்பற்றிய கோரிக்கையைக் கைவிட வேண்டும். நாங்கள் மேலே குறிப்பிட்ட பொதுக் கொள்கைகள் ஒப்புக்கொள்ளப்படுமானால், ஆந்திர மாகாணத்தை அமைக்கலாம். ஆனால், இருதரப்பாரும் பரஸ்பரம் சம்பந்தப்பட்டும் சென்னை மாகாணத்தின் இதர பகுதிகளின் சம்மதத்தோடும் ஏற்படலாம். பிற்பாடு மாறுதல்கள் நிகழுவது சாத்தியமில்லாமற் போகவில்லை. மொழிவாரி மாகாணப் பிரிவினை வேலையை ஆரம்பிப்பதானால், முதன் முதலில் ஆந்திராவின் விஷயத்தைப் பரிசீலனை செய்யவேண்டும். பிரிவினைக்கு அனுகூல நிலைமைகள் இருக்குமானால், தனி மாகாணமாக ஆக்கிவிடலாம்.

---

# புதுக் குரல்

("தமிழ் ஒளி")



எங்கும் புதுக்குரல் சங்க மிசைக்குது;
எண்ணிய காரியம் மண்ணில் நடக்குது!

குப்பையில் கோபுர சிற்பம் முளைக்குது.
கொத்தடிமைத் தொழில் செத்துக் கிடக்குது!

யுத்த வெறிக்குரல் செத்துப் பிறக்குது;
உண்மை பலம் மக்கள் கையி லிருக்குது.
சொத்து சுகம், சமம் ஆக நெருங்குது;
தொல்லை யிருந்திடும் எல்லை சுருங்குது!

மேற்குப் பனிப் புயல் காய்ச்சல் விளைக்குது;
மிஞ்சும் அணுக்குண்டு நெஞ்சு கொதிக்குது!
தீர்க்க மருந்துகள் சேர்க்கும் சிறப்பொளி
செங்கதிர் போலெழுந் தெங்கும் நிலைக்குது!

எதிரில் வரும் புது வாழ்வு திதிக்குது;
ஏழை முகம், வரவேற்க மினுக்குது.
கதிர்கள் அறுத்திடும் காலம் இதிற், பலன்
காண நமக்கொரு வாய்ப்பு மிருக்குது!

கந்தல் உடுத்திய கந்தன் மகிழ்கிறான்
கண்ணை உயர்த்தி இவ் விண்ணை அளக்கிறான்.
வெந்திடு வாழ்வினில் ஊற்றப் புதுமழை,
வேகமதாய் முகில் வந்து குவியுது!

நீலக் கடல், தொடு வானம் அனைத்தையும்
நெஞ்சு மகிழ்வுடன் கொஞ்சி அழைக்குது!
கோல மழித்திடும் யுத்த மெனிற், சினம்
கொண்டு சமாதானத் தொண்டு நினைக்குது!

நித்திரையிற் புது நேயக் கனவுகள்
நீண்டு மகிழ்ச்சியைத் தூண்டி எழுப்பின!
சத்திய தேவதை நிர்த்தன மிட்டனள்
சர்வ தேசிய சங்கீதம் ஒலிக்கவே!

# திரை மறைவில் இன உணர்ச்சி

("வாலி")



இந்த உலகத்திலேயே இன உணர்ச்சி இல்லாதவன் எவனும் இல்லை. மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் சத்தம் மொழி வழிப்பட்ட இன உணர்ச்சி இருக்கத்தான் செய்கிறது. இதை ஒளிக்கவோ, ஒழிக்கவோ முயலுவது பேதமையேயாகும்.

கொள்கை, பழக்க வழக்கம் ஆகியவற்றால் வளர்ந்து விட்ட சாதி மதம் போன்ற பிரிவினை உணர்ச்சிகளும், பொருளாதாரச் சீர்கேட்டினால் வலுப் பெற்று விட்ட முதலாளி— தொழிலாளி வர்க்க உணர்ச்சிகளுங்கூட மனிதனின் பிறப்புக்குப் பிறகு பற்றிக் கொள்பவையே. ஆகையால், இன்றைய சமூக நியதிகளையும் சமுதாய அமைப்பையும் மாற்றிவிடுவதன் மூலம் அந்த 'இடைத் தோன்றல்' உணர்ச்சிகளை ஒழித்துவிட இயலும். ஆனால், மொழிவழிப்பட்ட இன உணர்ச்சி மட்டும் அத்தகைய தொற்று நோய் போன்றதல்ல; இது ஒவ்வொரு மனிதனுக்கும் கருவிலேயே அமைந்திருக்கும் திரு.

அன்னைவயிற்றின் கருவூலத்தில் உதித்து அசையத் தொடங்கும் காலத்திலேயே, தாய் மொழி உணர்ச்சி ஊனின் உதிரமாக ஊறிக் கலந்து விடுகிறது. பிறந்து மண்ணில் விழுந்து புரளுகின்ற நேரத்திலேயே தாய் நாட்டின் பற்று உடலில் உணர்வாகத் தோய்ந்து ஒட்டிக் கொள்கிறது. பேசவும் தெரியாத பிள்ளைப் பிராயத்தைக் கடந்து படித்தறியாப் பாமரனாகவோ, அல்லது பார் புகழும் பன்மொழிப் புலவனாகவோ வளர்ந்து விட்டாலும், ஒவ்வொரு மனிதனும் எந்த ஒரு கருத்தைப் பற்றியும் அடிப்படையாகச் சிந்திப்பது அவனவன் அன்னை மொழியிலேயேயாகும். ஆகவே, இவ்வாறு உடல், உணர்வு, உயிர் ஆகிய அனைத்திலும் ஒன்றிக் கலந்திருக்கும் மொழிவழி இன உணர்ச்சியை மட்டும் ஒருகாலும் ஒழிக்கவே முடியாது.

மனிதன் சாதிவிட்டு சாதி மாறலாம்; மதத்தை மாற்றிக் கொள்ளலாம்; முதலாளி தொழிலாளியாகவும், தொழிலாளி

முதலாளியாகவுங்கூட நிலை புரண்டு விடலாம். ஆனால், மொழியை மாற்றிக்கொள்ள மட்டும் எவனாலும் இயலாது. தமிழன் தெலுங்கனாகவோ, கன்னடன் மலையாளியாகவோ கூடுவிட்டுக் கூடுபாய முடியாது. ஒரு மொழிக் குரியவன் வேறு பல மொழிகளையும் கற்றுத் தேற லாம்; ஆயினும் அந்தப் பிற மொழிகள் அவனது அன்னை மொழிக் குரிய உரிமையை அடைய முடியாது. நெஞ்சத்தில் நினைவாகவும், இதயத்தில் எண்ண மாகவும் ஊற்றெடுப்பது அவன வன் தாய் மொழியேயாகும். ஆகவே, இந்த மொழிவழி இன உணர்ச்சியானது ஒவ்வொருவர் உள்ளத்திலும் அகற்ற முடியாத படி பதிந்தே இருக்கிறது. இதற்கு நாம் எத்தனை ஆதாரங் கள் வேண்டுமானாலும் எடுத்துக் காட்டலாம்.

உலகப் பொது அறிஞரான உத்தமர் காந்தியடிகள் நமது தமிழ் மொழியின் சிறப்பை வானளாவப் புகழ்ந்தார்; தமிழ் இலக்கியங்களையும், குறிப்பாக திருக்குறளையும் படித்தறிவதற் காகவே தமிழ் கற்றுக் கொள்ள வும் முயன்றார்; இந்த முயற்சியில் முழு வெற்றியடையாதவாறு அரசியல் அலுவல்கள் குறுக் கிட்டு விட்டனவே என்று மனம் வருந்தினார். அது மட்டுமல்ல; இந்தியாவின் பொது மொழி இந்துஸ்தானிதான் என்று இந்தி பக்தர்களுக்கு எதிராக வற்புறுத் திப் பேசினார்; இந்தியா முழு வதற்கும் ஒரே பொது லிபியை (எழுத்தை) ஏற்படுத்த — வேண் டும்; மற்ற மற்ற மாகாண மொழி களின் சொற்களை யெல்லாம் தேவநாகரி லிபியைக் கொண்டே எழுதச் செய்ய வேண்டும் என்று கூடக் கூறினார். ஆனால், அவர் தமது வாழ்க்கை வரலாற்றை எழுதியது மட்டும் அவரது தாய் மொழியாகிய குஜராத்தியில் தான்! உலகத்தோடு உறவு கொண்டிருந்த போதிலும், இந் தியாவின் பொது மொழிக் கொள் கையில் எவ்வளவு ஆர்வமிருந் தாலும் தாய்மொழிப் பற்று தவிர்க்க முடியாதது என்ற உண் மையை நிலை நாட்டினார்.

'நோபல்' பரிசு பெற்ற "கீதா ஞ்சலி"யை இயற்றிய ரவீந்திர நாத்தாகூர்கூட, அதை முதலில் தமது தாய் மொழியாகிய வங்க மொழியில் வரைந்த பின்பே ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கச் செய்தார். நாடு, அரசு, கொள்கை முதலிய வரையறைகளைக் கடந்த கவியரசரும் இந்த மொழிவழி இனப்பற்றை மட்டும் கடக்க வில்லை.

'ஒரே இந்தியா' கொள்கை யில் காந்தி யடிகளைப் போலவே உறுதியான பற்று கொண்டிருந்த பாஞ்சால வீரர் லாலா லஜபதி ராய், வங்கத்தின் சிங்கம் சுபாஷ் சந்திர போஸ், தமிழ்ப் பெருந் தலைவர் வ.உ.சிதம்பரனார், தேசீ யக் கவிஞர் பாரதியார் முதலிய அனைவருமே தத்தமது மொழி வழி இனப்பற்றை ஒவ்வொரு சமயத்திலும் பெருமையோடு வெளியிட்டிருக்கின்றனர்.

இதற்கு எண்ணற்ற எடுத்துக் காட்டுகள் உள்ளன. (இவற்றின் விவரங்களை முந்திய பல கட்டுரைகளால் "முரசு" வாசகர்கள் அறிந்திருக்கலாம்.) இந்திய உபகண்டத்தில் மட்டுமல்ல; 'ஒரே உலக' தத்துவம் பேசும் பொதுவுடைமை வாதிகளின் லட்சிய பூமியாகிய சோவியத் ரஷ்யாவிலுங்கூட மொழிவழி இனப்பற்று இருந்து வந்திருக்கிறது; இன்னும் இருந்தே வருகிறது. இதை சர்வதேச அரசியல்ஞானமுடையவர்கள் அறியாதிருக்க முடியாது.

பல்வேறு இனங்களின் மீதும் ஆதிக்க அரசு செலுத்திக் கொண்டிருந்த ஜார் ஆட்சி ஒழிக்கப்பட்டவுடனே சோவியத் மொழிவாரி தேசீய இனங்கள் கிளர்ந்து எழுந்தன.

ஒவ்வொரு மொழி பேசும் பிரதேசமும் தனித்தனி நாடாகப் பிரிந்து சுய நிர்ணய உரிமையுள்ள சுதந்தரக் குடியரசை அமைத்துக் கொள்வதற்கு உரிமை வேண்டுமென்று வற்புறுத்தினர்.

இந்த மொழிவழி இன உணர்ச்சியை நசுக்கி விடுவதற்காக கிரேட் ரஷ்ய முதலாளிகளும், அந்த ஏகாதிபத்திய வெறியர்களிடம் பட்டம் பதவிகளுக்காகவும், சுய நலத்திற்காகவும் கையாட்களாகிவிட்ட (மற்ற மொழிக்குரிய தேசிய இனத்தவரில்) சிலரும் எத்தனையோ சதிகளைச் செய்தனர். ஆயினும், இறுதியில் மொழிவழி இன உணர்ச்சியே வெற்றி பெற்றது. ஒவ்வொரு மொழிவழி தேசிய இனத்தவரும் தனித்தனிக் குடியரசுகளை அமைத்துக் கொண்டனர். அந்தக் குடியரசுகளைக் கொண்ட சோவியத் கூட்டரசே இன்றளவும் எந்த முதலாளித்துவ ஏகாதிபத்திய நாட்டினாலும் எதிர்க்க முடியாத அளவுக்கு வலுப்பெற்று விளங்குகிறது. 'ஒரே உலக' தத்துவத்தைக் கொள்கையளவில் எட்டுத் திசைகளுக்கும் எடுத்தோதிய போதிலும், அங்கு ஆட்சி முறையில் அமைந்திருக்கும் தனித்தனிக் குடியரசுகளை—மொழிவழி இன உணர்ச்சியை—அவர்கள் இதுவரை அழிக்கவில்லை; இனியும் அழிக்கப் போவதில்லை.

இவ்வாறு எங்கெங்கும் மனித வர்க்கத்தோடு இரண்டறக் கலந்திருக்கும் மொழிவழி இன உணர்ச்சி நம் நாட்டவர்க்கு இருக்கிறதா? ஆம், இங்கும்—இப்பொழுதும், ஒவ்வொருவருக்கும் அந்த இன உணர்ச்சி இருக்கத்தான் செய்கிறது. ஆனால், எப்படி? ஒளிவு மறைவின்றி ஒருமித்துக் கூடி வெற்றிப்பாதையை நோக்கி விரைவதாக இல்லை. ஆட்சி ஆதிக்க வெறியர்களின் பொய்யான பிரசாரத்தினாலும், அவர்களுடைய கையாட்களாகி விட்ட பதவிப்பித்தர்கள் சிலரின் சுயநலப் போதனைகளாலும் நம் நாட்டவரின் இன உணர்ச்சி பதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது.

"இன உணர்ச்சி கொள்வது பிரிவினைப்புத்தி; குறுகிய நோக்

கம்!" என்றெல்லாம் மூளையற்ற முறையில் கூறப்படும் வாக்குகளை நம்பி—அந்த வகைமொழிகளுக்கு அஞ்சி—சொந்தச் சிந்தனையற்ற பலர் தமது இன உணர்ச்சிக்குத் தாமே திரை போட்டுக் கொண்டிருக்கின்றனர். அது மட்டுமல்ல; இந்தப் போலிக் கட்டுப்பாட்டுக்கு அடங்காமல் தமது மொழிவழி இன உணர்ச்சியை தீரத்தோடு வெளியிடும் அரசியலறிஞர்களை, பதவி வேட்டைக்காரர்களுடன் சேர்ந்து கொண்டு பரிகசிக்கவும், பழிகூறவுங்கூட துணிந்து விடுகின்றனர்!

ஆயினும், மொழிவழி இன உணர்ச்சியை நிந்திக்கும் 'ஒரே இந்தியா' வேஷதாரிகளுக்குள்ளும் இந்த இன உணர்ச்சி கனிந்து கொண்டுதான் இருக்கிறது. அது பல சமயங்களில் அவர்களையும் அறியாமலே வெளிப்பட்டு விடவும் செய்கிறது! உதாரணமாக வி. பி. மேனனின் செயலையே முதலில் குறிப்பிடலாம்.

"மொழிவழிப் பிரிவினை கோருவது தேசத்தை பிளவு படுத்தும் நாசவேலை!" என்பது 'ஒரே இந்திய' அரசாங்கத்தின் உதவிப்பிரதமரான சர்தார் படேலின் கருத்து. அவரது தலைமையின் கீழுள்ள சமஸ்தான இலாகாவின் ஆலோசகர் என்ற முறையில்தான் வி. பி. மேனன், திருவிதாங்கூர் பிரச்னையைப் பரிசீலனை செய்வதற்காக அனுப்பப்பட்டார். அவர் தமது பதவிக்குரிய பாதுகாப்பின்படி "மொழிவழிப் பிரிவினை இப்பொழுது சாத்தியமில்லை. ஐக்கிய கேரளத்தையும் இப்பொழுது அமைக்க முடியாது!" என்றுதான் பாவனை செய்தார். ஆனால், உதட்டளவில் இம்மாதிரி கூறிக்கொண்டே உள்ளத்தில் ஐக்கிய கேரள அமைப்பிற்கு அடிகோலி விட்டார்! கொச்சியையும் திருவிதாங்கூரையும் இணைப்பதைக் கண்டித்து திருவிதாங்கூர் தமிழர்களனைவரும் எதிர்ப்பு தெரிவித்தும், அவர்களை மிரட்டி அடக்கிவிட்டு அந்த ஐக்கிய கேரள ஆரம்ப அமைப்புக்கு ஆதரவு காட்டிவிட்டார். ஆம், அவர் ஒரு மலையாளி. உள்ளுக்குள் ஒளித்து வைக்கப்பட்டிருந்த மொழிவழி இன உணர்ச்சி அவரது இந்தச் செயலிலே தலை நீட்டிவிட்டது!

பட்டாபி சீதாராமையா நெடுங்காலமாகவே மொழிவழிப் பிரிவினையை வற்புறுத்தி வந்தார். அவர் அகில இந்தியக் காங்கிரசின் தலைவரானபொழுதும், பதவியின் பாசத்திற்குத் தமது இன உணர்ச்சியைப் பலியிட்டு விடாமல் உறுதியாகவே பேசினார். "மொழிவழிப் பிரிவினை மிகமிக அவசியமும் அவசரமுமாகும், அதைச் செய்வதில் சிக்கல் எதுவும் இல்லை. அப்படியிருப்பினும்,—மனிதனுக்கு அறிவு இருப்பது சிக்கலைத் தீர்ப்பதற்கேயன்றி அவற்றைப் பூட்டிப் பூட்டி வைப்பதற்கல்ல" என்று ஆணித்தரமாகக் கூறினார்.

பின்னர், தார் கமிஷனின் தீர்ப்புக்கு நாடெங்கும் கிளம்பிய

(உஅ-ம் பக்கம் பார்க்க)

# அட்லாண்டிக் ஒப்பந்தம்

(வானம்பாடி எழிலன்)



சென்ற உலக மகா யுத்தத்தின் கோர சொரூபம் விடைபெற்றுச் சென்ற அடிச்சுவடு கூட இன்னும் மறையவில்லை. தகர்ந்து தரைமட்டமான கூட கோபுர, மாட மாளிகைகள் இன்னும் தலை தூக்கவில்லை. பாசிஸப் பேய்களின் ஆதிக்க வெறியை எதிர்த்துத் தீரப் போரிட்டு வீர மரணமடைந்த பல்லாயிரக்கணக்கான போர் வீரர்களின் மனைவி, மக்கள், பெற்றோர், உற்றோர் விட்ட கண்ணீரின் ஈரங்கூட இன்னும் காயவில்லை!

அதற்குள்ளாக அடுத்த ஒரு பயங்கர யுத்தத்திற்கு அடிகோலும் திட்டம் வகுக்கப்பட்டு விட்டது. ஆம்; போர் வெறிகொண்ட ஆதிக்கப் பேரரசுகள் அரும்பாடுபட்டு "அட்லாண்டிக் ஒப்பந்தம்" என்ற போர்த் திட்டத்தை வகுத்து விட்டன. அமெரிக்கா, கானடா, பிரிட்டன், பிரான்ஸ், இத்தாலி, ஹாலந்து, போர்ச்சுகல், நார்வே முதலிய பன்னிரண்டு நாடுகள் சேர்ந்து, 'அட்லாண்டிக் உடன்படிக்கை'யில் கையொப்பமிட்டுள்ளன.

"தங்கள் பிரதேச ஐக்கியமோ, அரசியல் சுதந்தரமோ, அல்லது பாதுகாப்போ உலகில் எங்கு பாதிக்கப்பட்டாலும்—ஆலோசனை நடத்தவும், தங்கள் சுதந்தர ஸ்தாபனங்களைப் பலப்படுத்தவும் எல்லா முயற்சிகளையும் செய்யவும், தங்களுக்குள் பொருளாதாரத் துறையில் தகராறு வராமல் பார்த்துக் கொள்ளவும், இவ்வொப்பந்தம் மூலம் அங்கம் வகிக்கும் நாடுகள் உடன்படுகின்றன."

என்பதே உடன்படிக்கையின் மூலாதாரத் திட்டமாகும். இதைப்பற்றி விளக்கிப் பேசுகையில் ஜனாதிபதி ட்ரூமன், "இது ஆக்கிரமிப்பு ஒப்பந்தந்தான்" என்று மார்ஷல் ஸ்டாலின் சொன்னதை மறுத்து, "ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாக்கும் கவசமே அட்லாண்டிக் ஒப்பந்தம்" என்று கூறியுள்ளார்.

அப்படியானால், யார் யாரை ஆக்கிரமிக்கிறார்கள்—அல்லது ஆக்கிரமிப்பார்கள் என்று நினைத்து இந்த உடன்படிக்கை உருவாயிற்று என்பதைமட்டும் மறைத்து வைத்தே எல்லோரும் பேசியிருக்கிறார்கள்.

இந்த ஒப்பந்தத்தை உருவாக்கிய முக்கியமான நாடுகள், உலகத்தின் பல்வேறு பாகங்களிலும், தமக்குச் சொந்தமான காலனி நாடுகளை அமைத்துக் கொண்டு, ஆதிக்கம் செலுத்தி வருபவையேயாகும். அந்தக் காலனி நாடுகளில் குமுறியெழும் மக்களின் சுதந்தர உணர்ச்சியை அடக்குமுறையால் தகர்த்து, தங்கள் வியாபாரத்திற்கு சந்தைக் கூடங்களாக வைத்து சுரண்டி வருபவையேயாகும். இத்தகைய ஏகாதிபத்திய பித்தம் தலைக்கேறிய நாடுகள்தான், "ரஷ்யா ஆக்கிரமிப்புக் கொள்கையைக் கையாள ஆரம்பிக்கிறது" என்ற காரணத்தைக் காட்டி, தங்கள் ஆதிக்கத்திற்குத் தீங்கு வராமல் பாதுகாத்துக்கொள்ள முந்திக் கொண்டு விட்டன.

கடந்த பயங்கர உலக யுத்தத்தில், பாசிஸ வெறியர்கள் படுதோல்வியடைந்து, இருந்த இடம் தெரியாமல் புல் முளைத்துப் போகும் அளவுக்கு எதிர்த்துப் போரிட்ட நேசநாடுகளில், முக்கிய அங்கம் வகித்ததுதான் சோவியத் ரஷ்யா. அப்போது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் வைரத் தூணாக விளங்கிய சர்ச்சில் துரைகூட, ரஷ்ய மக்களை நோக்கி, "நீங்கள் ரஷ்யாவை மட்டும் காப்பாற்றிக் கொள்ளவில்லை; உலகத்தையே பாசிஸ வெறியர்களிடமிருந்து காப்பாற்றினீர்கள்" என்று வானளாவப் புகழ்ந்தார்.

அத்தகைய பெருமைக்கும், புகழ்ச்சிக்கும் பாத்திரமான சோவியத் ரஷ்யாவை, உலக மக்கள் திரும்பிப் பார்க்க ஆரம்பித்ததில் வியப்பொன்றுமில்லை! அத்துடன் போரிலே ஈடுபட்டு சொல்ல முடியாத கஷ்ட நஷ்டங்களையடைந்த நாடுகளையும், ஏகாதிபத்திய அடக்கு முறையாலும் சுரண்டல் கொள்கையாலும் அதிருப்தி யடைந்த நாடுகளையும், ரஷ்யாவின் சமதர்மக் கொள்கை வெகுவாகக் கவரத் தொடங்கியது.

உலக சமாதானத்தை உருவாக்கி அதைக் கட்டிக்காக்க வேண்டும் என்ற அடிப்படை லட்சியத்தில் அமைந்த ஐக்கிய நாடு ஸ்தாபனத்தில் அங்கம் வகிக்கும் ரஷ்யா, தனது தீர்மானங்களால், அடிமைப்பட்ட பல காலனி நாடுகளின் நல்லுறவை சம்பாதித்தது.

கோர யுத்தத்தின் விளைவால் சீர்குலைந்த போலந்து, செக்கோஸ்லோவகியா, ஹங்கேரி, ருமேனியா, பல்கேரியா, அல்பேனியா போன்ற கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் தொழிலாளர்கள், விவசாயிகள் ஆர்த்தெழுந்து தங்கள் ஆட்சியை ஸ்தாபிக்கப் போராடினார்கள். இவர்களுடைய போராட்டத்தில் ரஷ்யா தன் ஆதரவைக் காட்டியது. இதனால், அந்த நாடுகளின் உறவும் சோவியத் யூனியனுக்குக் கிட்டியது. இந்த நாடுகளையெல்லாம் ரஷ்யா ஆக்கிரமித்து

விட்டது என்பதை ஒப்புக்கொள்ளக்கூடிய நிர்பந்தத்திற்கே வல்லரசுகள் பேசி வருகின்றன.

..."ஆனால், ரஷ்யா இதுவரை கிழக்கு ஐரோப்பிய நாடுகள் பலவற்றையும் கவர்ந்தது அந்த முறையால் அல்ல. ஆங்காங்குள்ள கம்யூனிஸ்ட் கோஷ்டிகள் மூலம், தனது கையாட்களை அல்லது ஐந்தாம் படைகளைக் கொண்டு குழப்பம் விளைவித்து ஆட்சியைக் கைப்பற்றுவதே ரஷ்யாவின் வேலையாயிருந்து வந்திருக்கிறது. இதன் வெற்றியும் தோல்வியும் அந்தந்த நாட்டு மக்களின் வாழ்க்கையையும், மனோநிலையையுமே விசேஷமாகப் பொறுத்தது. முக்கியமாக பொருளாதாரம், அரசியல் முதலிய துறைகளில் கம்யூனிஸ்டுகள் குறிப்பதைவிட வேறு வழியே சிறந்ததெனக் கண்ட எந்தப் பிரதேசத்திலும் கம்யூனிஸ்ட் வேதாந்தம் எடுபடாது."

என்று "சுதேசமித்திரன்" ஏப்ரல் 5-ம் தேதிய தலையங்கத்தில் கூறுகிறது. அவர்கள் குழப்பம் விளைத்துதான் கைப்பற்றினார்களா—இல்லையா என்பது ஒருபுறமிருக்கட்டும். ஆனால், முக்கியமாக அந்தந்த நாட்டில் உள்ள மக்களின் வாழ்க்கையையும், மனோநிலையையும் பொறுத்து, கம்யூனிஸ்ட் தத்துவம் எடுபடக்கூடிய நிலையில்தான் அந்த நாடுகள் சீர்கெட்டு இருந்திருக்கின்றன என்பதை மறுப்பதற்கில்லை.

ஆகவே, ரஷ்யா தனது கொள்கை ரீதியாக அந்த நாடுகளைக் கவர்ந்தது என்பதுதான் உண்மையாகிறது. இந்த ஆராய்ச்சிக்குரிய ஆக்கிரமிப்பையே சாம்ராஜ்ய நாடுகள் தங்களின் அடிப்படை எதிர்ப்புக் கொள்கையாக வைத்துக் கொண்டிருக்கின்றன! இதை வெளியில் சொல்ல முடியாத குற்றச்சாட்டுகளாக அட்லாண்டிக் நாடுகள் மனதில் கொண்டே திட்டம் வகுத்துள்ளன.

தங்கள் ஆதிக்கப்பிடியை விடக் கூடாது என்று நினைக்கும் பிரான்ஸ், பிரிட்டன், அமெரிக்கா, போர்ச்சுக்கல், ஹாலந்து போன்ற நாடுகள் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்வதற்காக, ரஷ்யாவும் அங்கம் வகித்து வரும் ஐ. நா. சபையை ஒழித்துக் கட்டவும் முடிவு செய்து விட்டன.

இந்தோனேஷிய மக்களின் சுதந்தரக் கிளர்ச்சியை சுட்டுப் பொசுக்கிய ஆதிக்கவெறி பிடித்த டச்சு வெளிநாட்டு மந்திரி டாக்டர் ஸ்டிக்கர்,

"உலக சமாதானத்தை பாதுகாக்கக் கூடியது ஐ. நா. ஸ்தாபனம் ஒன்றேதான் என்ற பிராந்தி ஒழிந்து விட்டது"

என்று கூறி தன் ஆத்திரத்தைக் காட்டி, அந்த ஸ்தாபனத்தை சமாதியில் வைக்கும்

அரும்பணியில் தமக்குப் பெரும் பங்குண்டு என்பதை நிரூபித்து விட்டார். ஆனல்,

> "சமாதானத்தின் ஒரே நம்பிக்கையாகக் கருதிவந்த ஐ. நா. சபை, அட்லாண்டிக் ஒப்பந்தத்திற்கு முதல் பலியாகி விட்டது"

என்று ட்ரூமனேடு போட்டியிட்ட அமெரிக்க முற்போக்குக் கட்சித் தலைவர் வாலஸ் கூறுகிறர்!

ஆக, அரசியல், பொருளாதாரச் சீர்குலைவில் சிக்கிச் சிதையும் அடிமைபட்ட நாடுகளிலும், மற்றும் சுரண்டப்படும் நாடுகளிலும், 'எங்கெந்த விதங்களிலோ' தமது கம்யூனிஸக் கொள்கை ஆதிக்கத்தைப் பரப்பும் சோவியத் ரஷ்யாவிற்கும்,— உலகில் எட்டுத் திக்கிலும் தமது ஆட்சியை ஆயுத பலத்தைக் கொண்டு நிலைநாட்டவும், முன்னதாகக் கைப்பற்றியுள்ள நாடுகளைப் பாதுகாத்து அவற்றைத் தமது வியாபாரச் சுரண்டல்களுக்கு சந்தைக் கூடங்களாகவே உபயோகிக்கவும்பாடுபடும் ஏகாதிபத்திய நாடுகளுக்கும் ஏற்பட்டுள்ள முரண்பாட்டின் முதிர்ச்சிதான் அட்லாண்டிக் ஒப்பந்தம். அதன் முதல் வேலைதான் உலக சமாதானத்தைக் காக்க உருவான ஐ. நா. சபைக்கு அழிவுப்பாதை!

முதலாளித்துவ நாடுகளின் உடும்புப் பிடியில் சிக்கிச் சிதைந்துவரும் அரசியல், பொருளாதாரச் சீர்குலைவுகள் நிறைந்த நாடுகளில் இடதுசாரிகளின் எழுச்சி இருக்கத்தான் செய்யும். இந்த அடிப்படையான உண்மையைக் கூற முடியாமல் "ரஷ்யா, ஐந்தாம் படைகளையும், கம்யூனிஸ்ட் கோஷ்டிகளையும் கொண்டு குழப்பம் விளைத்து வருகிறது" என்ற ஒரே காரணத்தைக் காட்டி, உரிமை கோரும் நாடுகளின் மீது வல்லரசுகள் போர் தொடுக்கத்தான் இன்றைய சூழ்நிலை விரிந்து கொடுக்கும்.

ஆனல், ரஷ்யாவின் பிரச்சாரக் கவர்ச்சியை அடக்கியொடுக்க அட்லாண்டிக் ஒப்பந்தம் பயன்படாது. அதற்கு இன்றைய சூழ்நிலையில் அட்லாண்டிக் நாடுகள் செய்யவேண்டிய தென்ன?

ஏகாதிபத்திய மனப்பான்மையை விட்டு, இதுவரை ஆக்கிரமித்து அடிமைப்படுத்தி ஆட்சி செலுத்தி வரும் காலனி நாடுகளுக்கும், மற்ற நாடுகளுக்கும் விடுதலை வழங்க வேண்டும். இதைத்தவிர, புதிதாக நாடுகளை வேட்டையாடத் திட்டமிடும் மண்ணாசையையும், சுரண்டும் கொள்கையையும் விட்டொழிக்க வேண்டும். சமுதாயத்தில் மலைக்கும் மடுவுக்குமாக இருந்துவரும் பொருளாதாரச் சீர்கேட்டை சமநிலைப்படுத்தி, விவசாயிதொழிலாளிகளின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தி, முற்போக்கான முறையில் செயலாற்ற ஒவ்வொரு நாடும் முற்பட்டால், கம்யூனிஸ்டுகளின் பிரசாரத்திற்கும், சோவியத் ரஷ்யாவின் கொள்கை ஆதிக்

கத் திட்டத்திற்கும் இடமே இல்லாமற் போய்விடும். இந்த முறைதான் உலக சமாதானத்தைக் காக்கவும் சரியான வழியாகும். இப்படிச் செய்தால்தான், கம்யூனிஸ்டுகளின் ரத்தம் சிந்தும் புரட்சி, நாசவேலை, ஐந்தாம் படைத்தனம் என்றெல்லாம் வர்ணிக்கும் புரட்சித் திட்டங்களை முறியடிக்க முடியும். இதை விட்டு,—ஏகாதிபத்திய நாடுகள் மட்டும் சேர்ந்து அட்லாண்டிக் ஒப்பந்தத்தால் ஆட்சி ஆதிக்கத்தை நிலைநாட்டிக்கொள்ள முயன்று மீண்டும் யுத்தத்திற்கு அடிகோலுவது வெறுக்கத் தக்கதேயாகும்.

அகில உலகத்தின் சமாதானத் தூதராக விளங்கிய அகிம்ஸா மூர்த்தி காந்தியடிகளின் அரிய போதனைகளைப் பின்பற்றி ஆட்சி புரிந்துவரும் இந்திய அரசாங்கம் 'காமன்வெல்த் உறவு' என்ற பிணைப்பினால், ஏகாதிபத்திய வெறிபிடித்த நாடுகள் வகுக்கும் போர்த்திட்டத்திற்கு சிறிதளவும் உடன்படாது என்பதே நமது அசைக்க முடியாத நம்பிக்கை. இதை உறுதிபடுத்தும் முறையில் பிரதமர் நேரு, எப்ரல் 11–ல் பிரிட்டிஷ் பத்திரிகை நிருபருக்கு அளித்த பேட்டியின் போது "யுத்தத்தில் ஈடுபடும்படியான எந்த உடன்படிக்கையிலும் இந்தியா சேராது" என்று திட்டவட்டமாகத் தெரிவித்து விட்டார். ஆனால், இது மட்டும் போதாது' அந்த சோவியத் ரஷ்யாவின் 'கொள்கை ஆதிக்க'மும், கம்யூனிஸ்டுகளின் புரட்சிப் பிரசாரமும் இந்தியாவில் எடுபடாத வகைக்கு நமது நாட்டின் பொருளாதார ஏற்றத்தாழ்வைச் சீர்படுத்தவும் உடனடியாக அக்கறை கொள்ள வேண்டும் என்பதுதான் சுதந்தர சோஷலிஸக் குடியரசை அமைக்கப் பாடுபடும் தமிழகத்தின் ஏகோபித்த குரல்!

---

சிறு கதை:

# தங்க நகை

[ரு. மா. பா.]



தலைக்கு மேலே மின்சார விசிறி 'கர கர'வென்று சுழன்று கொண்டிருந்தது. அதைவிட வேகமாக ஓடிக் கொண்டிருந்தது என் சிந்தனை. ஆம், தாமதிக்க நேரமில்லை. சோஷியலிஸ்டுகள், கம்யூனிஸ்டுகள் போன்ற தீவிர வாதிகளின் கொள்கைகளைக் கண்டித்து, மாட்சிமை தங்கிய நமது இந்திய அரசாங்கத்தின் 'பட்ச பாதகமற்ற' ஆட்சி முறையையும், அதன் நடைமுறைச் செயல்களுக்குள்ளே ஒளிந்து கொண்டிருக்கும் 'சமதர்ம—ஜன நாயக' நோக்கங்களையும் ஆராய்ந்து விரிவுபடுத்தி அழகாக வர்ணித்து பகல் 2 மணிக்குள் அந்தக் கட்டுரையை எழுதி முடித்தாக வேண்டும்.

இம்மியை இமய மலையாகச் சித்திரிக்கும் சொல்லலங்காரங்களிலே லயித்துக் கிடந்தது என் கற்பனை. எழுத்துத் தடத்தின் மீது விரைவாக ஓடிக் கொண்டிருந்தது என் பேனா முனை. திடீரென்று ஒரு தேக்கம்!

"அம்மா... தாயே! புள்ளை குட்டியெல்லாம் ரெண்டு நாளா பட்டினி. கொஞ்சம் சோறு போடுங்கோ புண்ணியவதி...!"

தெருப்புறத்திலிருந்து ஒலித்த இந்தத் தீனமான குரல், என் எண்ண ஓட்டத்தை எதிர்த்து நிறுத்தியது. சற்று கோபத்துடனேயே நிமிர்ந்து சாளரத்தின் வழியே பார்வையைப் பாய்ச்சினேன்.

குழிந்த கண்கள், ஒட்டிய கன்னம், பரட்டைத் தலை, மெலிந்த உடல், கந்தல் உடை, தள்ளாடும் கால்கள்...பொதுவாக இந்த நாட்டின் ஏழ்மைக்கே ஒரு எடுத்துக் காட்டுபோல் நின்றது அந்த மனித உருவம். என்னையும் மீறி எனது கவனம் அவன்மீது படிந்தது.

இதற்குள் அந்தப் பிச்சைக்காரனால் துதிபாடப்பட்ட 'புண்ணியவதி'—என் மனைவி—சீறி விழுந்தாள். "சீச்சி! மாடு மாதிரி இருந்துகொண்டு பிச்சையெடுக்க வந்து விட்டான். சோம்பேறிக் கழுதை! எங்காவது போய் வேலை செய்து பிழைத்தால் என்ன?"...

இந்த வார்த்தைகளால் அவன் உடல் ஒரு முறை அதிர்ந்தது; முகம் சுருங்கியது; உள்ளோடிக் கிடந்த அவனது கண்களிலே 'பளிச்' சென்று ஆத்திரம்கூட மின்னியது. ஆனால், அது ஒரு விநாடிதான்! மறுகணமே கண்

ணீர் ததும்பி விட்டது. அழுகையின் குமுறலால் துடிக்கும் உதடுகளை மெல்லக் கடித்துக் கொண்டே அங்கிருந்து போகத் திரும்பினுன்.

சாதாரணமாக மற்ற பிச்சைக்காரர்களிடம் காணக்கிடைக்காத இந்த உணர்ச்சி, எனக்குப் புதுமையாக இருந்தது. 'இவன் பரம்பரை ஆண்டியல்லவோ' என்ற சந்தேகமும் முளைத்தது. "யாரப்பா நீ?" என்று மெதுவாக பேச்சுக் கொடுத்தேன்.

'என்னைப்பற்றி விசாரிப்பதற்குக்கூட ஒரு மனிதர் உண்டா!' என வியப்பதுபோல் திரும்பி என்னை நோக்கினுன். தொண்டையை அமுக்கும் சோகக் குரலிலே துன்ப மயமான தனது வரலாற்றின் குறிப்புகளைக் கூறினுன்.

* * *

கந்தப்பன், கோலார் தங்கச் சுரங்கத்திலே வேலை செய்து கொண்டிருந்த ஒரு தொழிலாளி. அவனுடைய வாழ்நாளின் பெரும் பகுதியைக் அந்த அபாயகரமான பணியிலேயே கழித்து விட்டான். ஆம், அது மிகவும் ஆபத்தான வேலைதான். பூமியைக் குடைந்து சென்று தங்கம் எடுத்து வருவதென்பது, புதிதாக ஒரு பிறவியையே எடுப்பது போன்ற காரியந்தான். எதிர்பாராத சமயத்தில் இடிந்துவிழும் பாறைகளுக்கடியிலே சிக்கி எத்தனையோ பேர் மடிந்துபோனதெல்லாம் அவனுக்குத் தெரியும்.

கோரமான அந்தக் காட்சிகளைக் கண்ணெதிரில் பார்த்துக் கொண்டே கலங்கா நெஞ்சத்துடன் கந்தப்பன் அந்த வேலையைச் செய்து வந்திருக்கிறுன். அவன் மட்டுமல்ல; அவனது மனைவி மக்களுங்கூட அந்த வேலையிலே ஈடுபட்டு உழைத்திருக்கின்றனர். இருள் நிறைந்த சுரங்கத்திற்குள்ளே தீப் பந்தங்களின் மங்கலான ஒளியில் குடும்ப சகிதமாக வேலை செய்து கொண்டிருக்கும்போது, மரணத்தின் நினைவு கந்தப்பனைப் பல முறை மருட்டியதுண்டு. 'இந்தச் சமயத்திலே திடீரென்று ஒரு பாறை இடிந்து விழுந்து விட்டால்......ஐயோ! எல்லோருமே கூண்டோடு மடிந்து போக நேருமே. பிறகு என் வம்சத்தின் பெயரைச் சொல்வதற்கு இந்த உலகத்தில் ஒரு குழந்தைகூட மிஞ்சாதே!' என்றெல்லாம் சிந்தித்துக் கலங்கி யிருக்கிறுன்.

கந்தப்பனுடைய எண்ணத்தின் எதிரொலியைப் போலவே அவனுடைய மனைவியும் ஒருநாள் கூறினுள். "இந்த வேலை எப்பொழுதும் பயமாகவே இருக்கிறது. இதைவிட்டு எங்காவது போய் விடுவோமே!" என்றுள். கந்தப்பன் பதில் கூறவில்லை; மௌனமாகச் சிரித்தான். 'இந்த வேலையையும் இழந்து விட்டுப் போய் பட்டினி கிடந்து அணு அணுவாக வதைபட்டுச் சாவதை விட, அப்படியே பாறை இடிந்து விழுந்து ஒரேயடியாக மடிவதா

ஞலும் நல்லதுதான்' என்று முணுமுணுத்தது அவன் உள்ளம்.

ஆகவே, அந்த வேலையைக் கந்தப்பன் உதறித்தள்ள விரும்பவில்லை. ஆனால், திடீரென்று ஒரு நாள் அந்த வேலையே கந்தப்பனை உதறித் தள்ளிவிட்டது! தங்கச் சுரங்க நிர்வாகிகள் 'ஆள் குறைப்புத் திட்டத்'தின்படி வெளியேற்றிய சுமார் 150 தொழிலாளர்களிலே, கந்தப்பனுடைய குடும்பத்தையும் சேர்த்து விட்டனர்!

நட்டாற்றில் கை விடப்பட்டவன் போலானான் கந்தப்பன். தேவையிருந்த வரையில் தன் உழைப்பை உறிஞ்சிக்கொண்டு, திடீரென்று தன்னைத் தெருவில் தவிக்கவிட்ட அதிகார ஆதிக்கவாதிகள் மீது அவனுக்கு ஆத்திரம் மூண்டது. ஆனால், அவர்களை எதிர்த்து ஒரு விரலை அசைப்பதற்குக்கூட சக்தியில்லை! குடும்பத்தின் பாரம் வேறு அவன் கழுத்தை நெருக்கியது. செய்வதறியாமல் கந்தப்பன் திண்டாடினான். அவனது பரிதாப நிலைமையை விசாரித்து நியாயம் வழங்குவதற்கு யாருமே முன்வரவில்லை.

கந்தப்பனின் வருமானம் நின்று விட்டதாயினும், வயிறு வழக்கம்போல் பசித்துக் கொண்டுதான் இருந்தது! அவனது குடும்பத்தினர் அங்கு வேலை செய்த சுமார் 25 ஆண்டுகளிலே எடுத்துக் குவித்த தங்கத்தையெல்லாம் சேர்த்துப் பார்த்தால், அவர்கள் ஏழு தலைமுறைகளுக்கும் இன்பமாக வாழ்வதற்குப் போதிய பொருள் மதிப்பு இருக்கும். ஆனால், வேலையை இழந்து அவர்கள் வெளியேறியபோது, ஒரு சில நாட்களுக்கு உயிர் வாழ்வதற்குப்போதிய சேமிப்புகூட அவர்களிடம் எஞ்சி இல்லை! உயிரையே பணயம் வைத்து உழைத்துக் குவித்த அவர்கள், அவ்வளவையும் யாரோ சிலரின் சட்ட சம்மதமான சுரண்டலுக்குக் 'கொள்ளை' கொடுத்துவிட்டுச் சந்தியில் நின்றனர்.

இளமை முதல் தங்கச் சுரங்கத் தொழிலில் மட்டுமே பழகியிருந்த கந்தப்பனுக்கு, வேறு என்ன வேலை செய்து பிழைக்கலாம் என்பதும் தெரியவில்லை. ஆயினும், 'எந்த வேலை கிடைத்தாலும் செய்துபார்க்கலாம்' என்ற தெளிவற்ற ஒரு நம்பிக்கையுடன் எங்கெங்கோ முயற்சி செய்தான். ஒட்டிய வயிறோடு கோலார் வீதிகளைச் சுற்றியலைந்தான். ஒரு பயனும் கிட்டவில்லை. தமிழ்நாட்டின் ஒரு பகுதியான தங்கவயலில் குடியேறிக்கொண்டு ஆதிக்கம் செலுத்த முயலும் கன்னடர்கள், கந்தப்பன் தமிழன் என்ற இன வேற்றுமையாலும் அவனை வெறுத்தொதுக்கினர்.

"இனியும் இங்கேயே தொல்லைப்படுவது வீண். வாருங்கள் நமது சொந்த ஊருக்கே போய் விடுவோம். அங்காவது ஏதேனும் வேலை செய்து பிழைக்கலாம்" என்று அழைத்தாள் கந்தப்ப

னின் மனைவி கண்ணம்மாள். ஆனால், கோலாரிலிருந்து சென்னைக்கு வந்து சேருவது எப்படி? வழிச் செலவுக்குப் பணம்?

கடைசியில் அவர்களுடைய குடும்பத்தின் ஒரே ஆஸ்தியாகக் கண்ணம்மாளின் கழுத்துக் கயிற்றிலே தொங்கிக் கொண்டிருந்த சிறிதளவு தங்கத்தையும் விற்றுக் கொண்டு சென்னைக்குப் புறப்பட்டார்கள்.

இங்கு வந்துதான் என்ன பயன்? ஏழை எங்கு சென்றாலும் வரவேற்பு அளிப்பது வறுமை தானே! கந்தப்பனின் கால்களிலே எஞ்சியிருந்த சக்தியும், சென்னையின் வீதிகளில் வேலை தேடி அலைவதிலே செலவழிந்து போயிற்று. ஒவ்வொரு தொழிலிலும் ஏற்கனவே பழக்கப்பட்டவர்களிலேயே எத்தனையோ பேர் திண்டாடித் திரியும்போது, புதிதாக வேலை கற்க வேண்டிய கந்தப்பனை யார் ஏற்றுக் கொள்வார்கள்?

தள்ளாடிக்கொண்டே போய் வீதியோரத்திலிருந்த ஒரு மரத்தின் நிழலில் சோர்ந்து படுத்தான் கந்தப்பன். பக்கத்திலே வரிசையாகக் கிடந்த பஞ்சைப் பட்டாளத்தின் மீது அவன் பார்வை சென்றது. அவனது சிந்தனை சுழன்றது. 'இவர்களெல்லாம் எப்படி உயிர் வாழ்கிறார்கள்?'......

பிச்சை எடுத்து!

'சேச்சே! உடலில் உணர்வு இருந்தும்—உழைக்க மனம் இருந்தும்—பிச்சை எடுத்துப் பிழைப்பதா?' என்று கந்தப்பனின் மனம் கூசியது. "ஏற்பது இகழ்ச்சி" என்ற தமிழ் வாக்கை அவன் படித்தறிந்ததில்லை. ஆயினும், தமிழனாகிய கந்தப்பனுக்கு இயற்கையிலேயே அந்த எண்ணம் உடலில் ஊறியிருந்தது.

ஆனால், வெட்கப்பட்டு என்ன செய்வது? வேறு வழி? கந்தப்பன் ஒரு உயிரோடு மட்டும் தீருவதாக இல்லையே! அவன் அருமை மனைவி மக்களையும் பட்டினி கிடந்து சாகச் சொல்வதா? உலகத்தில் பிறவி யெடுத்தது சாவதற்குத்தானா? இல்லை! இல்லவே இல்லை! முடிவுக்கு வந்து விட்டான் கந்தப்பன்.

சுதந்தரம்பெற்ற இந்த நாட்டிலே—தேசத்தின் கௌரவம் உயர்கின்ற இந்த நேரத்திலே—நாகரிகம் வளரும் இந்த நகரத்திலே—கந்தப்பன் தன் மானத்தை மறந்து கையில் சட்டி ஏந்தி விட்டான்! மக்கள் தொகையில் சேராமல் தனி வர்க்கமாக வளர்ந்தோங்கும்பிச்சைக்கூட்டத்தின் எண்ணிக்கையிலே மேலும் ஒரு புள்ளி அதிகமாயிற்று!

* * *

"அம்மா...தாயே! புள்ளை குட்டியெல்லாம் ரெண்டு நாளா பட்டினி. கொஞ்சம் சோறு போடுங்கோ புண்ணியவதி..." என்ற பாடத்தை ஒப்புவித்துக் கொண்டே அடியெடுத்து வைத்தான் கந்தப்பன்.

அவனைக் கொஞ்சம் இருக்கச் சொல்லி நம்பிக்கை கூறிவிட்டு, என் மனைவியை அழைத்தேன். "இவனுக்குக் கொஞ்சம் சோறு போட்டு அனுப்பு" என்று சிபாரிசு செய்தேன்.

அவள் மிகவும் அருவருப்போடு முகத்தைச் சுளித்துக் கொண்டாள். "இப்பொழுதுதான் சமையலை முடித்தேன். இன்னும் நாமே சாப்பிடவில்லை. அதற்குள் பிச்சைக்காரனுக்குப் போடலாமா?" என்று அழுத்தத் திருத்தமாகக் கேள்வி போட்டாள். பிறகு அவன் பக்கம் திரும்பி "போய்விட்டு கொஞ்சம் நேரம் கழித்து வா. சோறு போடுகிறேன்" என்று சற்று கருணையுடன் மொழிந்தாள்!

என் மனம் கந்தப்பனுக்காக முன்பே இளகி இருந்தது. அத்துடன், என் வார்த்தையையே எனது மனைவி புறக்கணித்துவிட்டதால், அவன் மீது அனுதாபம் அதிகமாக வளர்ந்தது. சட்டென்று பையிலிருந்து நாலணாவை எடுத்தேன்.

"இந்த ஊரிலே இருக்கிற பிச்சைக்காரர்களுக்கெல்லாம் இப்படிக் கொடுத்தால் உருப்பட்டுவிடலாம்!" என்று குத்தலாகக் கூறிய வண்ணம் தலையை 'வெடுக்' கென்று திருப்பிக் கொண்டு வேகமாக உள்ளே போனாள் என் மனைவி.

'பளிச்' சென்று என் மூளையிலும் ஒரு மின்னல். பிச்சைக்காரர்களுக்கெல்லாம் தாராளமாகப் பணத்தைக் கொடுத்தே அவர்களுடைய வறுமையைப் போக்கிவிட முயன்ற டால்ஸ்டாயின் வரலாறு என் நினைவுக்கு வந்தது.

"வறுமையில் வாடுகிறவர்களுக்கு இரண்டொரு துட்டுக்களைக் கொடுப்பதனாலேயே ஏதோ மகத்தான உதவியைச் செய்துவிட்டதாகச் சில பணக்காரர்கள் பெருமைப்பட்டுக் கொள்கின்றனர். இது, ஒரு மனிதனுடைய கழுத்தின் மீது ஏறியிருந்து நசுக்கிக் கொண்டே, அவன் வாயில் சிறு ரொட்டித் துண்டை ஊட்டுவதனால் அவனுக்குப் பெரிய நன்மையைச் செய்து விட்டதாக எண்ணிக் கொள்வது போன்ற மூடத்தனந்தான்!"

—இந்தக் கருத்துக்கள் என் உள்ளத்தில் குத்தின. "ஏழைகளுக்குப் பணக்காரர்கள் தர்மமாகக் கொடுக்கும் துட்டு யாருடையது? அத்தகைய ஏழை எளியவர்களின் உழைப்பையே சுரண்டிக்குவித்து வைத்துக்கொண்டு, அதிலிருந்து ஒருசிறுபகுதியைமட்டுமேஏழைகளுக்குத் திருப்பிக் கொடுப்பது பெரிய தர்மமாகிவிடுமா?" என்ற கேள்விகள் என்னை வெட்கத்தால் தலைகுனியச் செய்தன.

என் மனைவி 'வெடுக்' கென்று தலையைத் திருப்பிக் கொண்டு சென்றபோது அவள் கழுத்திலும் காதிலும் குலுங்கிய தங்க

நகைகள் என் மனக் கண்முன் பளபளத்தன. அந்தத் தங்கமெல்லாம் யார் திரட்டியது?......

'நான் தான்!' என்று கூறுவது போல் என் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றான் கந்தப்பன்.

'என்மனைவி தன்னை அழகு படுத்திக் கொண்டிருப்பதற்கு யாருடைய உழைப்பு காரணமோ, அவனையே 'பிச்சைக்காரன்' என்று அவள் கேவலமாக மதிக்கிறாள். ஆனால், அவனைப்போன்ற பாட்டாளிகளால் திரட்டித் தாப்பட்ட தங்கத்தை அணிவதனாலேயே தன் மதிப்பு உயருவதாவும் பெருமைப் படுகிறாள்! என்ன விந்தை!...

'என்மனைவி தான் சமைத்த சோற்றை "நாம் சாப்பிட்டபிறகு தான் பிச்சைக்காரனுக்குப் போடலாம்" என்று உறுதியாக எண்ணுகிறாளே! அதேபோல் அந்தக் கந்தப்பனும் எண்ணியிருந்தால்? 'நான் திரட்டிக் குவிக்கும் தங்கத்தில் நமது தேவை முடிந்த பிறகு, மிஞ்சுவதைத்தான் பிறருக்குத் தரலாம்' என்ற கொள்கையை அவனும் கடைப்பிடித்திருந்தால்?......

'அவன் மனைவி கண்ணம்மா எல்லவா தங்கச் சங்கிலிகளையும், வளையல்களையும் அணிந்து கொண்டிருப்பாள்! நான் எழுதிய கதைகளையும் கவிதைகளையுந்தானே என் மனைவி மாலையாகக் கோத்துப் போட்டுக் கொள்ள முடியும்!......

'சோற்று விஷயத்தில் மட்டும் கண்டிப்பாக நடத்தப்படும் இந்த நியதியை, தொழிலாளர்களின் உழைப்பு விஷயத்திலும் கடைப்பிடிப்பதற்கு சமூகமும் சட்டமும் ஏன் அனுமதிக்கவில்லை? இப்படிப்பட்ட சமூக அமைப்பையும், சட்டங்களையும் ஏற்படுத்தியவர்கள் யார்?...சோம்பேறிகள் தானே!.....'

......இப்படியெல்லாம் கரை புரண்ட போக்கில் ஓடிக்கொண்டிருந்தது என் சிந்தனை. "என்ன, கட்டுரை எழுதி முடித்து விட்டீர்களா?" என்று கேட்டுக் கொண்டே வந்து நுழைந்தார் என் நண்பர்.

"ஆம், இதோ முடிந்து விட்டது" என்று கூறி நிமிர்ந்து உட்கார்ந்தேன். நான் எழுதியிருந்த கட்டுரையை ஆரம்பத்திலிருந்து மறுபடியும் படித்துப்பார்த்தேன். ஒரு வரிகூட எனக்கே பிடிக்கவில்லை! கண்முன் காணும் இந்த உலகத்தின் நிகழ்ச்சிகளுக்கு நேர் மாறாக—கற்பனை உலகில் காணும் பொய்யான வர்ணனையாகவே தோன்றியது.

"சீச்சீ! இந்தக் கட்டுரையைக் கொடுத்துப் பணம் வாங்குவதைவிட, அந்தக் கந்தப்பனைப்போல் பிச்சை எடுப்பது கண்ணியமான செயல்" என்று கூறியது என் மனச்சாட்சி.

கையிலிருந்த கட்டுரையை சுக்கல் சுக்கலாகக் கிழித்து எறிந்தேன்.

———

(கூ-ம் பக்கத் தொடர்ச்சி)

எதிர்ப்பைக் கண்டு, அதுபற்றி மீண்டும் பரிசீலனை செய்வதற்காக அமைக்கப்பட்ட மூவர் கமிட்டியிலே படேல், நேரு ஆகியோருடன் பட்டாபியும் பங்கு கொண்டார். இந்த மூவர் கமிட்டி அறிக்கை தயாராகி முடியும் தருணத்திலே (மார்ச் மாத இறுதியில்) அவர் வெளியிட்ட கருத்து சற்று குரல் கம்மி ஒலித்தது! "மொழிவழிப் பிரிவினை அவசியந்தான். ஆயினும், அது சுமுகமாகவே நடத்தப்பட வேண்டும். துண்டு போட்டுக் கொள்ளும் முறையில் ஆத்திரப்படக் கூடாது!" என்ற தோரணையில் சுருதி இறங்கியது. படேல், நேரு ஆகியோருடன் சேர்ந்த கமிட்டியின் கூட்டுறவால் பட்டாபி தமது இன உணர்ச்சியை விற்று விட்டாரோ என்ற ஐயங்கூட நமக்கு எழுந்தது!

ஆனால், மூவர் கமிட்டியின் முடிவு என்ன? இந்தியாவின் மொழிவழிப் பிரிவினையை பொதுவாக கொஞ்ச காலத்திற்குத் தள்ளி வைக்கத்தான் வேண்டும் என்கிறது. ஆயினும், ஆந்திர மாகாணம் மட்டும் முதலில் பிரிக்கப்படலாம் என்று தனிப்பாதை திறக்கிறது! ஆம், பட்டாபி ஓர் ஆந்திரர். இந்தியா மொழிவழிப் பிரிவினையின் பொதுவான கொள்கையை ஒதுக்கி வைக்க ஒருப்பட்ட போதிலும், அவருடைய உரிமைத் திருநாடான ஆந்திர மாகாணத்தின் அமைப்பைத் தள்ளிவைக்க மட்டும் விட்டுவிடவில்லை! பதவிக்காகவும், படேலுக்காகவும் தமது பொதுக் கொள்கையைத் தளர்த்தினாராயினும், பட்டாபி தமது இன உணர்ச்சியை மட்டும் இழந்துவிடவில்லை!

மொழிவழி இன உணர்ச்சியைக் கடுமையாகத் தாக்கிப் பேசும் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் காமராஜருக்குக்கூட அந்த இன உணர்ச்சி உள்ளுக்குள் இருக்கத்தான் செய்கிறது. "மொழிவழிப் பிரிவினை கோருவது மாகாண வெறி! எல்லைப் பிரச்னைகளுக்காகக் கூச்சலிடுவது குறுகிய புத்தி!" என்றெல்லாம் கண்டித்தார். "தமிழர்கள் பரந்த புத்தியுள்ளவர்கள்! விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடையவர்கள்!" என்று தாராளமாகவும் பேசினார். ஆனால், (அவரது தமிழ்நாடு காங்கிரஸ் தலைமையின் அதிகார எல்லைக்குட்பட்ட) "சென்னை நகரத்தை தனி மாகாணமாக்க வேண்டும்" என்று பிரிவினைக் கமிஷன் கூறியவுடனேயோ, காமராஜரின் இன உணர்ச்சி அவரையும், அவரது பதவிப் பாதுகாப்புக்குரிய 'பரந்த புத்தி' யையும் மீறிக்கொண்டு பீறிட்டு விட்டது! "சென்னை நகரம் தமிழருடையதே. அதன் உரிமையில் கை வைத்தால், எனது இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர் பதவியையும் உதறித் தள்ளி வெளியேறுவேன்!" என்று உறுதியாகப் பறைசாற்றி விட்டார்.

இவ்வாறு... வி. பி. மேனன் ஐக்கிய கேரளத்திற்காக மட்டும்

இன உணர்ச்சி காட்டலாம்; தலைவர் பட்டாபி ஆந்திர மாகாணத்திற்கு மட்டும் அவசரத் திட்டம் வகுக்கலாம்; காமராஜர் சென்னை நகரத்திற்காக மட்டும் உரிமை முழக்கம் செய்யலாம்! ஆனால், இதே மொழிவழிப் பிரிவினைக் கொள்கையை இந்தியா முழுவதிலுமே ஒரே தரமாகக் கடைப்பிடிக்க வேண்டுமென்று கூறினால், அது 'குறுகிய புத்தி' என்று ஏசுவது ஏன்? ஒழிக்க முடியாத இந்த இன உணர்ச்சியை ஒளித்து வைத்துக் கொண்டு, அவரவர் தமது சொந்த நலனுக்குத் தேவைப் படும்போது மட்டும் கொஞ்சம் கொஞ்சமாக வெளிக்காட்டி— பதவி பறிபோகாமலும், உரிமை ஒதுங்கி விடாமலும் தந்திரவித்தை புரிவதுதான் 'பரந்த புத்தி'யா?

இதில் இன்னும் சில வேடிக்கைகள்! ஆர். கே. சண்முகம் சில ஆண்டுகளுக்கு முன் "தமிழ் மொழி, தமிழ்நாடு" என்றெல்லாம் ஆர்வமாகப் பேசி வந்தார். பிறகு, இந்திய அரசாங்கத்தின் நிதியமைச்சர் பீடத்தில் ஏறியவுடன் 'ஒரே இந்தியா' மத்திய ஆட்சியை உறுதிப்படுத்த வேண்டியதே அவசியம் என்று உபதேசம் செய்தார்! ஆனால், அந்தப் பதவியைப் பறிகொடுத்துவிட்டுக் கோவைக்கே திரும்பி வந்த பின்னரோ, "மொழிவாரியாக நாடுகள் விரைவில் பிரிக்கப் பட்டாலன்றி இந்தியா சுபீட்சமடைய முடியாது" என்ற கருத்தைச் சில தினங்களுக்கு முன் அழுத்தமாகக் கூறியிருக்கிறார். இம்மாதிரி மனமாற்றங்களையெல்லாம் அறியும்பொழுது, நம் நாட்டவர்களுக்கு உயரிய பட்டம் பதவிகள் கிடைப்பது, தமிழ் இன உணர்ச்சிக்கு ஏற்படும் அவகேடு என்றே எண்ணத் தோன்றுகிறது.

இவ்வாறு சொந்தக் காரியங்களுக்காக 'ஒரே இந்தியா' தத்துவம் பேசுவோருக்குள்ளதைப் போலவே, தமது 'தனிக்கட்சி' பாதுகாப்புக்காக 'திராவிட நாடு' கொள்கை கூறும் தமிழர்களின் நெஞ்சத்துள்ளும் மொழிவழி இன உணர்ச்சி மறைந்திருக்கவே செய்கிறது. "தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு இனத்தவரும் ஒரே திராவிட வகுப்பினர்தான்" என்று இவர்கள் உறுதியாகக் கூறி வருகின்றனர். ஆயினும், மலையாளிகளின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றுத் தமது தாயகமான தமிழ் நாட்டுடன் சேருவதற்குத் துடிக்கும் திருவிதாங்கூர் தமிழர்களின் கோரிக்கை, போராட்டம் ஆகியவற்றை ஆதரித்து இந்தத் 'திராவிடக் கழக'க்காரர்கள் பேசியும் எழுதியும் இருக்கின்றனர்! இந்தச் செயலே, அவர்களுக்குள் ஒளிந்திருக்கும் தமிழ் இன உணர்ச்சிக்குப் போதிய சான்று. மேலும், தமிழ் நாட்டிற்குள் தமிழ் மக்களைக் கொண்டே நடத்தப்பட்டு வரும் இந்த 'திராவிடக்' கழகத்தை தமிழ் இனத்தவர் சில

ரைத் தவிர வேற்றவர் எவரும் ஏற்றுக் கொள்ளாதது, மற்ற மூன்று மொழியாளர்களும் தத்தமது இன உணர்ச்சியிலேயே உறுதியாக இருப்பதையும் விளக்குகிறது.

உண்மை இதுவாக விருந்தும் பட்டம், பதவி, தனிக்கட்சி முதலியவற்றின் பாதுகாப்புக்காக மேற்பூச்சான தத்துவங்களைப் பேசும் அரசியல் சூதாட்டக்காரர்களும், அவர்களை அப்படியே பின்பற்றுவதுதான் தமது அரசியல் ஞானத்திற்கு ஆதாரம் எனக் கருதும் வேறு பலரும் மொழிவழி இன உணர்ச்சியை மூடிவைத்துக்கொள்வதே வழக்கமாகி விட்டது.

இன்னும் பலர், மேடைகளில் நின்று பண்டைத்தமிழர் மாண்பையும், பழந்தமிழ் நாட்டுச் சிறப்பையும் தொண்டை கிழியப் பேசுகின்றனர். தமிழ்ப் பத்திரிகையாளர்களில் பலரும் தமிழ் இலக்கியங்களின் உயர்வையும், தமிழ் மொழியின் வளத்தையும் அழகாக வரைகின்றனர். "அதெல்லாம் சரி. ஆனால், இன்றைய தமிழகத்தின் இழி நிலையைப் போக்க தமிழர்கள் இன உணர்ச்சியுடன் சேர வேண்டும்" என்றால் மட்டும், அதை ஏற்காமல் பதவிப் பித்தர்களின் திரைக்குப் பின்னே ஓடி ஒளிந்து கொள்கின்றனர்!

"தமிழன் என்றொரு இனமுண்டு; தனியே அவர்க்கொரு குணமுண்டு" என்று நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் எழுதியதைப் படித்துப் பலரும் பாராட்டுகின்றனர். ஆனால், அதே கருத்தை வற்புறுத்தி "தமிழர் தனி இனம்தான். அதற்குரிய உரிமையைப் பெறுவதற்கு ஒன்று திரளுவோம்" என்று அழைத்தால், உடனே பின்னோக்கிச் செல்லத் தொடங்கி விடுகின்றனர்! "நமது தேசத்தில் பலப்பல இனங்கள் இருப்பதாகச் சொல்வது தவறு. இந்தியாவில் ஒரே இனம்தான் உண்டு—அதுதான் இந்திய இனம்!" என்ற வட நாட்டுத் தலைவரின் வாக்கைத் தலைமீது தாங்கி, தமிழ்க் கவிஞரின் போதனையைத் தரையில் தேய்த்து விடுகின்றனர்!

இப்படி ஒரு நிலையற்ற புத்தியும் இனஉணர்ச்சிக்குத் திரை போட்டுக்கொள்ளும் கோழைத்தனமும் இருப்பதனாலேயே, மற்றமொழியாளர்களெல்லாம் அவரவர் இன உரிமையின் வெற்றியை நெருங்கிக் கொண்டிருக்கும் இந்த நேரத்திலே, தமிழ் இனத்தவரின் உரிமை மட்டும் ஏலத்தில் இழுபட்டுக் கொண்டிருக்கிறது!

இந்தப் போலி நிலைமை மாற வேண்டும். திரை மறைவில் ஒளித்து வைத்திருக்கும் தமது இன உணர்ச்சியைப் பெருமையோடு வெளிப்படுத்தி, தமிழ் மக்களனைவரும் ஒரு முகமாகத் திரண்டு உரிமையைப் பெறுவதற்கு உறுதி கொண்டால், அடுத்தகணமே தனித் தமிழ்க் குடியரசு அமைந்து விடுமென்பது திண்ணம். அந்த வெற்றி நாள் விரைவில் வருமாக!

# இலங்கையில் 'மலான் ஆட்சி!'

(வே. க.)



அநீதிக்கும் அழிவுக்கும் வழி காட்டிச் சென்ற எவரும், இது வரை போற்றப்பட்டதில்லை. புறக்கணிக்கப்பட்டனர் என்பதற்கும் சான்றுகள் பல உள்ளன. கொடுங் கோலன் ஜாரும், சர்வாதிகாரி ஹிட்லரும் நிர்மூல மாக்கப்பட்டதை நாம் இன்னும் மறந்து விடவில்லை. அவர்களின் வழித் தோன்றலாக, ஆஸ்திரேலியாவில் ஒரு 'கால்வெல்' லும், ஆப்பிரிக்காவில் ஒரு மலானும்தான் தலை யெடுத்த தாக எண்ணி யிருந்தோம். இதோ இலங்கையில் ஒரு சேன நாயகாவும் இருக்கிறு ரென்பதை இனி நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

முதலாளித்துவ—சமூக—அரசியலமைப்புள்ள எந்தநாட்டிலும் வேலையில்லாத் திண்டாட்டம் சர்வ சாதாரணம். அது இலங்கையில் விபரீதமான அளவுக்கு வளர்ந்திருக்கிறது. இதற்கு இந்தியத் தொழிலாளர்தான் காரணமென்றும், அவர்களை இந்த நாட்டிலிருந்து வெளியேற்றி விட்டால், நெருக்கடியைச் சுலபமாகத் தீர்த்து விடலாமென்றும் இலங்கை சேனநாயகா அரசாங்கம் கனவுகாணுகிறது. உண்மையில் வேலையில்லாத் திண்டாட்டத்திற்குக் காரணமும், பரிகாரமும் அதுவல்ல.

இலங்கைக்கு உயிர் நாடியாயிருப்பது ரப்பர் தோட்டங்கள் தான். அந்த ரப்பரை அயல் நாட்டுச் சந்தைகளில் விற்ருல் தான் இலங்கை உயிர் வாழ முடியும். சமீபத்தில், இந்த ரப்பர் தோட்டங்கள் லாபகரமாகப் பலன் தரவில்லையென்று, தோட்ட முதலாளிகள் பல தோட்டங்களை மூடிவிட்டனர். அதனுல் லட்சக்கணக்கான தொழிலாளர் வேலை இழக்க நேர்ந்தது. வேலையில்லாத் திண்டாட்டம் உச்சநிலைக்கு எட்டியது. இதற்கு தோட்ட முதலாளிகள் மட்டும் காரண மல்ல; சேனநாயகா அரசாங்கமும், அதன் ஆங்கிலோ-அமெரிக்க அடிவருடித்தனமுமே முக்கிய காரணங்களாகும்.

இலங்கையில் உற்பத்தியாகும் ரப்பர் முழுவதையும் உலகில் வேறெந்தநாடும் கொடுக்கும் விலையைவிட அதிக விலை கொடுத்து வாங்க ரஷ்யா முன்வந்தது. ஆனுல், ரஷ்யாவுக்கு ரப்பரை விற்க சேனநாயகா அரசாங்கத்திற்குச் சுதந்தர மில்லை! ரப்பர் யுத்த சாதனங்களுக்கான பொருளென்றும், அதை ரஷ்யாவுக்கு விற்பதால், பெரும் ஆபத்தென்றும் பிரிட்டன் தடுத்து விட்டது.

அமெரிக்கா, ரப்பர் தனக்கு தேவைப்பட்டபோது 'ஒரு நியா

யமான விலைக்கு இலங்கை ரப்பரை வாங்கிக் கொள்வதாகவும், அதுவரையில் காத்திருக்கும் படியும் கட்டளையிட்டது. இது தான் இலங்கை ரப்பர் தோட்டங்கள் லாபகரமில்லாமல் போனதற்கும் அதனால் வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற உள் நாட்டு நெருக்கடிகள் அதிகமானதற்கும் காரணம்.

ஆங்கிலோ - அமெரிக்க அச்சுக்கு மனங் கோணாப் பத்தினியாக மாலையிட்ட சேனநாயகா அரசாங்கம், தானாகவே விளைவித்துக் கொண்ட இந்நெருக்கடியைச் சமாளிக்க ஒரு நேரான வழியைக் கடைப் பிடிக்கவில்லை. இந்தியருக்கு அநீதி இழைப்பதன் மூலமே இப் பிரச்னைக்குப் பரிகாரம் காண முயலுகிறது!

கல்லும், முள்ளும் நிறைந்து வன விலங்குகளுக்கே வாழ் விடமாயிருந்த இலங்கைத் தீவை, தேயிலையும், ரப்பரும், தென்னையும் பயிரிட்டு செழிப்புடையதாக்க இந்தியத் தொழிலாளர்-பெரும்பாலும் தமிழ்த்தொழிலாளர் - அன்று தேவையாயிருந்தது. இலங்கைச் சுதேச மக்களுக்கு,எவ்விதத்திலும் குறைவுபடாத சம உரிமை அளிப்பதாக ஆசை வார்த்தை சொல்லியே அப்பொழுது அவர்களை அழைத்தனர். அதை நம்பித் தான் அவர்கள் இலங்கை சென்றனர். பண்டைக் காலத்திலே இலங்கையில் தமது கொடி நாட்டி ஆளுவதற்காகச் சென்ற வீரத் தமிழர்களின் சந்ததியார், பிறகு இலங்கையில் கூலிவேலை செய்து பிழைக்கவும் போக நேர்ந்தது!

உயிரைத் திரணமாக மதித்து, உழைப்பை உரமாகப் போட்டு, உதிரத்தை தண்ணீராக வார்த்து, இலங்கையை ஒரு எழில் மிக்க நாடாக்கினர் நம் நாட்டுத் தொழிலாளர்கள். அதற்கு அவர்கள் அடைந்த பலன் உழைப்புக் கேற்ற ஊதியங்கூட இல்லை. அந்த உழைப்பாளி மக்களுக்கு இப்பொழுது இலங்கை நாட்டில் பிரஜா உரிமையும் இல்லை யென்று மறுக்கின்றது சேனநாயகா அரசாங்கம். இந்த அநீதியோடும் அது நின்று விடவில்லை.

"பிரஜா உரிமை பெற முடியாத இந்தியர் எப்போதும்போல் இலங்கையில் இருந்து வர எவ்விதத் தடையுமில்லை" யென்றார் ஒரு சமடம் சேன நாயகா. இன்றோ, அதற்கும் ஆபத்தேற்பட்டிருக்கிறது. இலங்கை இந்தியர்களுக்கு அநீதியான பிரஜா உரிமைச் சட்டம் நிறைவேற்றப்பட்டபோது அதை எதிர்த்தவர்களிடம் ஒரு மந்திரி "நாங்கள் இன்னும், இதைப்போல் எத்தனையோ சட்டங்களைக் கொண்டு வர உத்தேசித்திருக்கிறோமே! அதையெல்லாம் நீங்கள் எப்படிப் பொறுத்துக் கொள்ளப் போகிறீர்கள்?" என்றும் சொல்லியிருக்கிறார்!

இந்தியத் தொழிலாளரை வேலைக்கு அமர்த்திக் கொண்டிருக்கும் எல்லா ஸ்தாபனங்களு

டனும், இலங்கை அரசாங்கம் ஒரு மகாநாடு நடத்தி, அதில் ஏற்கனவே வேலையிலிருந்து வரும் இந்தியர்களுக்குப் பதிலாக, இலங்கையர்களையே அமர்த்திக் கொள்ளும்படி சொல்லப் போகிறதாம். இதற்கு ஓர் ஆரம்ப நடவடிக்கையாக, இலங்கை முழுவதும் கள்ளிறக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள சுமார் இரண்டாயிரம் இந்தியருக்குப் பதில், இலங்கையர்களுக்குப் பயிற்சியளிக்கவும் திட்டமிட்டிருக்கிறதாம். இதனால் வேலையிழக்கும் இந்தியர்களின் நிலைமை என்ன என்று ஒரு மந்திரியைப் பேட்டி கண்டவர் கேட்டார். அவர் "அதைப் பற்றி எங்களுக்குக் கவலையில்லை; இலங்கையர்கள் வேலையில்லாமல் திண்டாடுவதை நாங்கள் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. அவர்களுக்கு வேலை தேடிக் கொடுப்பதுதான் எங்கள் ஒரே நோக்கம்" என்று பதில் சொன்னாராம். இந்த நீதியற்ற பதில் இந்தியத் தொழிலாளரிடையே பெரும் அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது.

சேனநாயகா அரசாங்கத்தின் இந்த விபரீதமான போக்கைக் கண்டித்து, இடது சாரிக் கட்சித் தலைவரான டாக்டர் என். எம். பெரைரா ஒரு பத்திரிகை நிருபருக்குப் பேட்டியளித்த போது பின்வருமாறு கூறியிருக்கிறார்:

"ஏற்கனவே வேலையிலிருந்து வரும், இந்தியத் தொழிலாளரை நீக்கி விட்டு அந்த இடத்தில் வேலையற்ற இலங்கையர்களை நியமிக்க முயற்சிப்பது, வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தீர்க்க சரியான பரிகாரமாக மாட்டாது. அது ஏற்கனவே இருக்கும் வேலையற்றோரின் கஷ்டங்களோடு உரிமைப் போராட்டம், போட்டிப் பூசல் ஆகியவற்றையும் கிளப்பி விட்டு புதிய தொல்லைகளையே விளைவிக்கும். வேலையிழக்கும் இந்தியர்களெல்லோரும் இந்தியாவிற்குத் திரும்பி விடுவார்களென்று நினைப்பது பெருந் தவறு. கட்டாயத்தின் பேரில் அவர்களை நாடு கடத்தவும் முடியாது. வேலையற்ற இந்தியர் இந்நாட்டிலிருக்கும்வரை, அவர்களுக்கு வேலை தேடிக் கொடுக்கும் பொறுப்பை இலங்கை அரசாங்கம் எவ்விதத்திலும் அசட்டை செய்ய முடியாது."

இந்தியரை நீக்கி அதே இடத்தில் இலங்கையர்களை அமர்த்தும் முயற்சி இதுபோல் பலதடவை நடந்திருக்கிறது. கொழும்பு துறைமுகத்திலேயே இவ்வித முயற்சி பலதடவை நடந்து படுதோல்வியடைந்திருக்கிறது. குறிப்பிட்ட சில வேலைகளில் இந்தியத் தொழிலாளரைப் போல் மற்றவர்கள் வேலை செய்ய முடியாதென்றும் பல சந்தர்ப்பங்களில் தெளிவாகி இருக்கிறது.

உண்மையில், வேலையில்லாத் திண்டாட்டத்தை போக்க வேண்டுமானால், இலங்கையில் கைத்தொழில் முன்னேற்றத்திற்கு வெகுதூரம் இடமிருக்கிறது. புதிய பல தொழில்களை ஆரம்பித்து அவற்றிலே, வேலையற்ற

இலங்கையர்களுக்குப் பொருத்த மான வேலைகளைக் கொடுப்பது தான் சரியான வழி.

இந்தியர்களை வெளியேற்று வதிலே எண்ணங் கொண்டுள்ள சேனநாயகா அரசாங்கம், இந்தி யாவுக்குப் பணம் அனுப்புவதற் காகத்தான் இந்தியர்கள் வேலையை விடாமல் பிடித்துக் கொண்டிருக் கிறார்களென்றும், இந்தியா வுக்குப் பணம் அனுப்புவது சம்பந்தமான சட்ட திட்டங் களைக் கடுமையாக்கி விட்டால் அவர்கள் வேலையை விட்டுப் போய் விடுவார்களென்றும் எண்ணி அவ்விதமே செய்து விட்டது.

"இந்தியாவுக்குப் பணம் அனுப்புவது முதலாளிகளே; தொழிலாளரல்ல. பெரும் பாலான தொழிலாளர்கள் கடன் பட்ட நிலையிலேயே இருக்கின் றனர். ஒரு சிலர் ஏதோ அனுப் பினாலும் அவர்கள் அனுப்பும் பணம் மிகமிகச் சொற்பம். தமது நாட்டின் பொருளாதாரத் தையே இலங்கை நிதி மந்திரி இன்னும் சரிவரத் தெரிந்து கொள்ள வில்லை யென்பதையே இது விளக்குகிறது!" என்று இதற்கும் சரியான பதிலளித் திருக்கிறார் டாக்டர் பெரைரா.

இவ்வித அநீதியான முறை களால்தான் இந்தியரை நாடு கடத்த முயற்சிக்கிறது சேன நாயகா ஆட்சி. இந்தக் கொடு மையை ஒழிக்க இலங்கை மக் களும், இலங்கைவாழ் இந்திய-தமிழ் நாட்டு மக்களும் ஒன்று பட்டு யு. என். பி. ஆட்சிக்கு முடிவு கட்டி, உண்மையான ஜனநாயக - சோஷியலிஸ அர சாங்கத்தை அமைக்கப் பாடுபடு வதே இலங்கையின் நலத்திற் கும், தொழிலாளரின் விமோ சனத்திற்கும் சரியான வழி யாகும்.

---

# கவிஞனும் காதலும்

(சி. வே.)



கவிஞன் ஒருவகைத் தனிப் பிறவி. உலகப் பொருட்களை சாதாரணமக்கள் பார்த்துக்களிப்பதற்கும், அவற்றையே கவிஞன் கண்டு சிந்திப்பதற்கும் அதிக வேற்றுமை உண்டு. நுட்பமான செய்திகளும், இயற்கையான உணர்ச்சிகளும் அவனது கருத்துக்குப் பெரு விருந்தாகின்றன. அவற்றை அழியா எழுத்தோவியமாக்கும் திறன், கவிஞனுக்கே தனிவுடைமையாகின்றது. அவனது நெஞ்சத்தில் அலைமோதும் நினைவுகளைப் பலவிதக் காட்சிகளில் அமைத்துச் சொற்சித்திரங்கள் தீட்டாவிட்டால் அவனால் அமைதி கொள்ள முடியாது.

பரந்த வானவெளியிலே கணக்கற்ற கிரகங்கள் தொங்கிக்கொண்டும், சுற்றிக்கொண்டும், சுழன்றுகொண்டும் இருப்பதாக வான நூல் வல்லுநர்கள் கூறுகின்றனர். இதற்குக் காரணம், ஒன்றை ஒன்று ஈர்க்கும் சக்தி அவற்றிற்கு இயற்கையில் அமைந்திருப்பதெனவிளக்கம்செய்கின்றனர். எல்லாப் பொருட்களும் பூமியைநோக்கி விழுவதை இதற்கு உதாரணமாகவும் காட்டுகின்றனர் விஞ்ஞானிகள்.

கிரகங்களுக்கு இப்படி இயற்கையாகவே அமைந்திருக்கும் ஈர்க்கும் சக்தி, அவற்றில் வாழும் உயிரினங்களுக்கும் தொத்திக் கொண்டதோ என்னவோ! இதனால்தான் கிரகங்களிலொன்றான பூமியில் வசிக்கும் எல்லா உயிர்களும் ஒன்றால் ஒன்று ஈர்க்கப்பட்டுச் சேர்ந்து வாழ்கின்றன போலும்!

பதினெட்டாவது நூற்றாண்டில் விஞ்ஞானிகளால் ஆராய்ந்து முடிவு செய்யப்பட்ட இந்த ஈர்க்கும் தன்மையை, அதற்குப் பல்லாண்டுகளுக்கு முன்பிருந்தே உயிரினங்களில் கண்டு பிடித்துப் புகழ் பாடிவந்துள்ளனர் கவிஞர்கள். உலகத்தின் பல்வேறு பாகங்களிலும், பற்பல காலங்களிலும்தோன்றியஎல்லாக் கவிஞர்களும் அந்தச் சக்தியைப் பாடத்தவறவில்லை. அந்தச் சக்திதான் காதல்!

ஆண்—பெண் ஆகியோரிடையே உள்ள இனக்கவர்ச்சியை மையமாகக் கொண்டே பழங் காலத்தில் எல்லா நாடுகளிலும் கவிதைகள் பிறந்துள்ளன என்று கூறுவர் ஆராய்ச்சியாளர். அது மட்டுமா? மொழி பிறந்ததே அந்தக் காதல் உணர்ச்சியினால்

தான் என்பது மொழியியல் வல்லுநரின் கருத்து. அதாவது, மனிதர்கள் முன்காலத்தில் சைகைகளாலேயே தமது கருத்துக்களை வெளியிட்டு வந்தனரென்றும், பிறகு ஆண்களும் பெண்களும் தமக்குள் இயற்கையாக எழுந்த காதல் உணர்வை ஒருவருக்கொருவர் தெரிவித்துக் கொள்வதற்காக அர்த்தமற்ற சில ஒலிகளை எழுப்பினரென்றும், அவை நாளடைவில் குறிப்பிட்ட சில எண்ணங்களை வெளியிடும் கருவிகளாக—சொற்களாக—அமைந்தன வென்றும், இத்தகைய சொற்களே காலப்போக்கில் பண்பட்டுப் பின்னர் சுவை ததும்பும் மொழியாக வளம்பெற்றதென்றும் விரித்துரைப்பர். எது எப்படியானும்' காதல் உணர்வு என்பது பல்வேறு அரிய சாதனைகளுக்கும் அடிப்படையாக அமைந்துள்ள தென்பதில் ஐயமில்லை.

இந்தக் காதல் உணர்வை கவிஞர்கள் கையாண்டுள்ள முறைகள் பற்பல. இயற்கைக் காட்சிகளுடன் காதல் உணர்வை ஒன்றுப்படுத்திக் கூறுவர் ஒருசிலர். காதல்பற்றை கடவுள் பக்தியோடு இயைபு படுத்துவர் இன்னும் சிலர். மனோ நிலையில் தோன்றும் எண்ண நுணுக்கங்களை திறமையுடன் படம் பிடித்துக்காட்டுவர் வேறு சிலர். இதே முறையில் காதற் பெண்களின் கருத்து நெகிழ்ச்சிகளை, கதவைத் திறக்கக்கோரும் கவிதைகளாக ஒரு கவிஞர் சித்திரித்துக் காட்டுகிறார் பாருங்கள்:

பகைவர் மீது போருக்குச் சென்ற வீரர்கள் குறித்த காலத்தில் தமதில்லம் திரும்பவில்லை. அவர்களுடைய காதற்கிழத்தியர் பிரிவாற்றாது வருந்துகின்றனர். "இதோ வந்துவிடுவார்! அதோ வந்துகொண்டிருக்கிறார்!" என்றெல்லாம் வழிமேல் விழி வைத்து வாயிற்கதவை ஆவலோடு திறந்து பார்த்தனர். இப்படிப் பல முறையும் ஏமாந்து விட்டனர். எதிர்பார்த்தபடி தம்து கணவர் வராததால் உள்ளம் சோர்கின்றனர். ஆகையால், கோபத்தோடு கதவை மூடிவிடுகின்றனர். பாவம்! அவர்களுடைய நெஞ்சத்தின் புலம்பலைப்போல் கதவு' கிறீச்'சிடுகிறது.

இவ்வாறு இரவு முழுவதும் கதவைத் திறந்து திறந்து மூடுவதையே தொழிலாகக் கொண்டிருந்தனர். விடியற்காலையளவும் இந்த ஏமாற்ற நாடகம் நடைபெற்றதைக் கூறி, கதவை திறக்கும்படி அந்தப் பெண்களை வேண்டுகிறார் கவிஞர்:

"வருவார் கொழுநர் எனத்
திறந்தும்
வாரார் கொழுநர் என
அடைத்தும்
திருகும் குடுமி விடியளவும்
தேயும் கபாடம் திறமினோ"

(திருகும் குடுமி=கதவுக்குப் பொருத்தியுள்ள கீல்கள் சுழலும் முளைகள்.)

இரவெல்லாம் ஏமாந்து சோர்வுற்ற பெண்கள் உண்மையில்

அவர்களுடைய கணவர்கள் வரும் போதும் எங்கே எதிர் கொண்டு உபசரிக்காமல் இருந்து விடுவார் களோ என்று ஐயங்கொள்கிறார் கவிஞர். ஆகையால், தளர்ந்த உள்ளங்கள் கிளர்ச்சியுறும்படி அவர்களுடைய தன்மைகளையும் செயல்களையும் எண்ண அலை களையும் நயம்பட எடுத்துக் காட்டி உற்சாக மூட்டிப் பாடு கிறார்.

பெண்கள் தம்முடைய அடர்ந்த கருங்கூந்தலில் அன்றலர்ந்த செங்கழுநீர்ப் பூவைத் திருகி எடுத்துச் செருகிக்கொள்கின்ற னர். ஏற்கனவே அவர்களின் தோற்றப்பொலிவால் தம் நெஞ் சைப் பறிகொடுத்து ஏங்கும் காளையர், இந்த மலர் செருகும் காட்சியால் காதல் உணர்வு கரை புரள உள்ளம் துடிக்கின்றனர். இந்த இன்ப வேதனைச் சம் பவத்தை நினைவில் எழுப்பக் கவிஞர் பாடுகிறார் :

"முருகிற் சிவந்த கழுநீரும்
முதிரா இளைஞர் ஆருயிரும்
திருகிச் செருகும் குழல் மடவீர்
செம்பொற் கபாடம் திறமினோ"

அடடா! அந்தப் பெண்கள் மலரை மட்டுமா திருகிச்செருகிக் கொள்கின்றனர். இல்லை! அங்கு நிற்கும் இளைஞர்களின் உயிரையு மல்லவா அப்படியே திருகி எடுத் துப் பதித்துக் கொள்கின்றன ராம்! இத்தனை எழில்வாய்ந்த பெண்ணரசிகளே என்று புகழ் பாடிவிட்டு இறுதியில் கதவைத் திறக்கும்படி கோருகிறார் கவி ஞர். என்ன தந்திரம்! பெண் கள் தமது அழகைப் போற்றும் மொழி கேட்டால் கோபந்தீர்ந்து விடுவர் என்ற மனோதத் துவத்தை இவர் எங்குக் கற் றிருப்பார்!

மற்றொருசுவைமிகுந்தநிகழ்ச்சி. ஒரு கணவனும் மனைவியும் நிலவு பொழியும் இரவில் தனியிடத் தில் இன்பம் நுகர்ந்தனர். விளையாட்டுப் பேச்சுக்கும், பழிப் புப் பேச்சுக்கும், அந்தரங்கத்தில் மட்டுமே புகலக் கூடிய மொழி களுக்கும் அப்போது குறை வேது? ஏதேதோ பேசினார்கள்! கொஞ்சினார்கள்; குழறினார்கள். இவையெல்லாம் யாருக்குமே தெரியக் கூடாது - தெரியாது என்பது அவர்களுடைய எண்ணம். ஆனால்......?

மறுநாள் காலை வேளையில் அந்தப் பெண் தனது தோழிகள் நடுவே பேசிக்கொண்டிருக்கும் நேரத்தில் வேறொரு குரல் ஒலிக்கிறது. முதல் நாளிரவில் அவளும் கணவனும் தனியிடத் தில் பேசிக் கொண்டிருந்த இன்ப மொழிகளனைத்தையும், அப் படியே ஒலிப்பதிவு செய்யப் பட்ட இசைத் தட்டுபோல் யாரோ திருப்பிக் கூறுகின்றனர்! அவள் திடுக்கிடுகிறாள். இந்த மறைமொழிகளைக் கள்ளத் தனமாகக் கேட்டறிந்தவர் யார் என்று அறிய அந்த ஓசை எழுந்த பக்கத்தை நோக்கு கிறாள். என்ன ஏமாற்றம்! அவள் அன்புடன் வளர்த்து வரும் செல்வப் பைங்கிளிதான் அங்குக் காட்சியளிக்கிறது!

அப்பொழுதுதான் அவளுக்கு உண்மை விளங்குகிறது. நாணமும் பொங்குகிறது. அந்தக் கிளிகூறும் பேச்சுகளைக் கேட்கும்போது, முந்திய இரவின் சம்பவங்களும் அதன் இன்ப நினைவுகளும், அவள் நெஞ்சத்தில் மீண்டும் எழுகின்றன. அந்த அனுபவம் அவளுக்கு விருப்பமாகவும், களிப்பாகவுமே இருக்கிறது. ஆயினும், சுற்றிலும் தோழியர் சூழ்ந்திருக்கின்றனரே; அவர்கள் கேலிசெய்து தலை குனிய வைத்து விடுவார்களே!

அதுமட்டுமா? தனது கணவன் கூறிய காதல் மொழிகளையும் கிளி கூறுவதினால், அந்தப் பேச்சிலுள்ள இன்பத்தை—தனக்கு மட்டுமே உரியதான அந்தச் சொற் சுவையை—செவி வழியே கேட்டறிந்து தோழிகளுமல்லவா பங்கு கொண்டு விடுவார்கள்! ஆகவே, விரைந்து சென்று கிளியின் வாயைப் பொத்தி விடுகிறாள்.

“நேயக்கலவி மயக்கத்தே
நிகழ்ந்த மொழியைக்
கிளியுரைப்ப

வாயைப் புதைக்கும் மடநல்லீர்
மணிப்பொற் கபாடம்
திறமினோ”

என்று இந்தச் சம்பவத்தைப் பாட்டாக உருவாக்கிக் காட்டுகிறார் கவிஞர். இதைக் கேட்ட பிறகும், கதவைத் திறவாமலிருக்க அந்தப் பெண்களின் நெஞ்சம் கல்லா என்ன!

அருகிலிருந்த கிளியை மறந்து-ஏன், அவள் தன்னையே மறந்து கணவனுடன் கொஞ்சினாள். கிளி வாளாவிருக்குமா? ‘சொன்னதைச் சொல்லும்’ தன்மையுள்ள கிளி, அவர்களுடைய பேச்சுகளை உற்றுக் கேட்டு கற்றுக் கொண்டுவிட்டது! தன்னைப் புறக்கணித்ததற்காக அந்தக் கிளி தலைவியைப் பழி வாங்க நினைத்ததுபோலும்! அதனால் அவள் கணவனுடன் பேசியமொழிகளை எல்லோருக்கும் மத்தியில் கூறி அவளை நாணமடையச் செய்து விடுகிறது!

அதுமட்டுமின்றி, அவள் கணவன் பேசிய மொழிகளையும் அந்தக் கிளி கூறியது. இத்தனை நாட்களாய் தன்னை அன்புடன் வளர்த்த தலைவி, ‘வேறொரு மனித’னிடம் (கணவனிடம்) மெய்ம்மறந்து கொஞ்சிக் குலவினாளென்றால், அவனைப் போலவே நாமும்பேசினால் அவளுடைய அன்பைக் திருப்பிவிடலாம் என்று அந்தக் கிளி எண்ணியதோ என்னவோ!

காதல் உணர்வை இப்படி பல வழிகளிலும் சித்திரித்துக் காட்டி நம்மை மகிழ்விக்கிறார் செயங்கோண்டார் என்னும் கவிஞர். அவர் பாடியுள்ள “கலிங்கத்துப் பரணி” வீர உணர்ச்சியையே சிறப்பாக எடுத்துக் காட்டும் நூலாகும். ஆயினும், அதில் இத்தகைய காதல் கவிதைகளும் ஒளி வீசுகின்றன. ஆம். காதல் அடிப்படையில்தானே வீரம் பிறக்கிறது!

---

# நாட்டு நடப்பு

## ஆரூரில் தமிழ்த் திருநாள்

தமிழ் நாட்டின் முக்கிய நகரங்களி லொன்றான திருவாரூரில், கடந்த 16–4–49 அன்று ஓமந்தூரார் தலைமையில் தமிழ்த் திருநாள் மிகச் சிறப்புடன் கொண்டாடப்பட்டது மகிழ்ச்சிக் குரியதே. தமிழுக்காக இத்தகைய விழாக்கள் நடைபெறுவது, நம் தாய் மொழியின் வளர்ச்சிக்கும் தமிழ் இனத்தின் ஊக்கத்திற்கும் இன்றியமையாததாகும். ஆகவே, இத் திருநாளைக் கொண்டாடுவதற்கு அக்கறைகொண்ட தமிழ் வளர்ச்சிக் கழகத்தாருக்கு முழு மனதுடன் நன்றி கூறுகிறோம்.

இந்த விழாவில் திருவாளர்கள் ஆர். கே. சண்முகம், கே. சந்தானம், எம். பக்தவத்சலம், டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன், அவிநாசிலிங்கம், ரா. பி. சேதுபிள்ளை, மு. வரதராசனார் முதலியவர்கள் சிறப்பாகக் கலந்து கொண்டுள்ளனர். தமிழ் இலக்கியங்களின் நலனுக்காகவும், தமிழின் சிறப்புபற்றியும் இவர்கள் மொழிந்துள்ள கருத்துக்கள் பாராட்டத்தக்கவை. சென்னை அரசாங்கப் பொருளாதார ஆலோசகரான திரு. பா. நடராசன், நமது நாட்டின் பொருளாதார நலனுக்காக பத்தாண்டு திட்டத்தை வகுத்து, அதை ஐந்து ஐந்து ஆண்டுகளாக இரு கட்டங்களில் செயலாற்ற வேண்டிய ஒரு அரிய யோசனையையும் அங்கு வெளியிட்டிருக்கிறார். இதுபற்றி சென்னை அமைச்சர் குழு அக்கறை கொண்டு ஏற்று நடத்த முன்வர வேண்டும்.

தமிழ் மக்க ளனைவருக்கும் உரித்தான இந்தத் தமிழ்த் திருநாளில், பெரும்பாலும் அமைச்சர்களும் அதிகார வர்க்கத்தைச் சேர்ந்தவர்களும் மட்டுமே முதன்மை வகித்திருப்பது மறைக்கமுடியாத ஒரு குறையேயாகும்.

அடிமுடி காணாத் தமிழ்மொழியானது, அரசியல்–அதிகாரக் கூட்டத்தினருக்குள்ளேயே அடங்கி விடுவதல்ல. தமிழறிவில் சிறந்த புலவர்கள் முதலியோருக்கும் இத்தகைய விழாக்களில் தலையாய இடமளித்து சிறப்பிப்பதுதான் தமிழ்மொழியின் வளர்ச்சிக்குச் செயலளவில் வழி வகுப்பதாகும்.

இனி நடக்கவிருக்கும் தமிழ்த் திருநாட்களிலேனும் தமிழறிஞர்களுக்குச் சிறப்பான இடமளித்து மொழியறிவு நிறைந்த கருத்துக்களை ஒலிக்கச் செய்யவேண்டும்.

## பாதகச் செயல்!

"தமிழ் அரசாங்க மொழியாக வேண்டு மென்பதில்லை; ஆனால், காலத்திற்கேற்ப வளருந்தன்மை யடைய வேண்டும்"......

இந்தச் சொற்கள் வடநாட்டிலோ, ஆந்திர நாட்டிலோ; அல்

லது வேறு பிறமொழியாளராலேயோ கூறப்பட்டவையல்ல. தமிழ் நாட்டில், தமிழராகப் பிறந்த 'சர்தார்' வேதரத்தினம் தான் இவ்வாறு மொழிந்திருக்கிறார்! அதுவும், அவர் அரும்பாடு பட்டுப் பணியாற்றிவரும் இந்தி பிரசாரக் கூட்டத்தில் பேசியதாக இருந்தாலாவது நாம் வியப்படைவதற்கில்லை; திருவாரூரில் நடைபெற்ற தமிழ்த் திருநாளில்-'தமிழ் வளர்ச்சிக்காக' எனக் கூறிக்கொண்டு கூடியிருந்த தமிழர்களின் நடுவிலேயே இவ்வாறு புகன்றிருக்கிறார்!

இப்படிப் பேசியுள்ள தென்னாட்டுச் 'சர்தார்' வேதரத்தினத்தின் துணிவும், இதை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த தமிழர்களின் பொறுமையும் மிகமிகப் பாராட்டத்தக்கவையே!

ஆனால், தமிழ் 'காலத்திற்கேற்ப வளரும் தன்மையை அடையவேண்டும்' என்று அவர் கூறியிருப்பது தேவையற்ற பேச்சேயாகும். ஏனெனில், இந்த வேதரத்தினங்களைப் போன்றவர்கள் இந்த நாட்டில் பிறந்து தமிழ் மொழியிலேயே செல்வாக்குடன் இப்படிப் பேசிவந்துங்கூட, இன்னும் தமிழ்மொழி இளமை குன்றாது நிலைத்திருப்பதிலிருந்தே, காலத்திற்கேற்ப வளரும் தன்மை மட்டுமல்ல; காலை வாரி விடுவோரின் சதிகளை எதிர்த்து நிற்கும் தன்மையும் தமிழுக்கு இயற்கையிலேயே அமைந்திருக்கிறதென்பது தெளிவாகிறது.

இத்தகைய வல்லமையுள்ள தமிழ் மொழி, இனி அரசியல் மொழியாகவும் உரிமை பெற வேண்டுமென்பதுதான் மானமுள்ள தமிழ் மக்களின் உறுதியான கோரிக்கை. இதற்கு வேதரத்தினம்போன்றவர்கள் ஆதரவு தரா விட்டாலும், எதிர்ப்பு செய்யாமலாவது ஒதுங்கியிருப்பது தான் பெருமையாகும். அவர் தமிழகத்தில் மாபெரும் பொறுப்புடன் இந்திப் பிரசாரம் செய்து வருவதே போதும் வட நாட்டுத் தலைவர்களின் தயவைப் பெறுவதற்கு. அதற்காகத் தமிழ் மொழியை நேரடியாகவும் காட்டிக் கொடுக்கத் துணிவதென்பது, பெற்றெடுத்த அன்னையை பிச்சை எடுக்கச் செய்வதுடன், அவள் தலையில் கல்லைத் தூக்கியும் போடுவது போன்ற மாபாதகச் செயலாகும்.

---

# கணபதியைக் காப்போம்

( துரை-சுந்தரேசன் )



அகில மலேயா தொழிற் சங்க சம்மேளனத்தின் முன்னாள் தலைவரான, தமிழர் திரு. வ. கணபதிக்கு, கோலாலம்பூர் ராணுவ நீதிமன்றம் மார்ச் 15ம் தேதி மரண தண்டனை விதித்திருக்கிறது. இந்தச் செய்தி தமிழ் நாட்டு மக்களையே பெரியதொரு அதிர்ச்சிக்கு உள்ளாக்கி விட்டது.

வந்தோருக்கெல்லாம் வாழ்வளிக்கும் தமிழகத்தில் - தஞ்சை மாவட்டம் பட்டுக் கோட்டைத் தாலூக்கா தம்பிக்கோட்டையில்—பிறந்த கணபதி, வயிற்றுப் பிழைப்புக்காக இளம் வயதிலேயே மலேயாவுக்குச் சென்றார். 'திரைகடலோடியும் திரவியம் தேடு'வதற்காக அல்ல; பிறந்த நாட்டைப் பிற இனத்தவர்கள் சுரண்டிக் கொண்டிருப்பதால் வேலை செய்து பிழைப்பதற்குக் கூட அவர் நாடோடியாகச் செல்ல நேர்ந்துவிட்டது.

மலேயா நாட்டின் ரப்பர், தேயிலைத் தோட்டங்களிலே கூலிவேலை செய்தே உயிர் வாழ்ந்தாராயினும், ஆதிக்க வெறியர்களின் அரசியல் அட்டகாசங்களை அவர் எதிர்க்கத் தயங்கவில்லை. கடந்த உலகப்போரில் ஜப்பானிய பாசிஸ வெறியர்களை எதிர்த்து ஆயுதந்தாங்கிப் போராடிய வீரர்களுள் கணபதியும் ஒருவர். யுத்தத்திற்குப் பிறகு அவர் தொழிலாளியாகவே வாழ்ந்தார்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முதலாளி வர்க்கத்தின் சுரண்டல்களுக்குள்ளாகி, சொல்ல முடியாத் துன்பங்களை அனுபவித்த அவர் நெஞ்சில், சகதொழிலாளர்களின் துயர நிலையும் கிளர்ச்சி மூட்டிற்று. தமிழ் இரத்தத்திற்கே இயற்கையாக உள்ள இன உணர்ச்சியினால் தமிழ்த் தொழிலாளர்களைத் திரட்டி ஒரு தொழிற் சங்கத்தை அமைக்கப் பாடுபட்டுப் பல உரிமைப் போராட்டங்களுக்கும் தலைமை தாங்கினர்.

முதலாளியாக வாழ்ந்து கொண்டே 'தொழிலாளர் தலைவராகும்' ஒருசிலரைப் போலன்றி, கணபதி ஒரு உண்மைத் தொழிலாளியாகவே இருந்து தொழிலாளர் தலைவரானார். தமிழ்த் தொழிலாளர் மட்டுமன்றி, சீன, மலேயா போன்ற இதர நாட்டுத் தொழிலாளர் பலரும் கணபதியிடம் மதிப்பு கொண்டனர். அகில மலேயா தொழிற் சங்க சம்மேளனத்தின் தலைவராகவும் அவரையே தேர்ந்தெடுத்தனர்.

1947ல் பண்டித நேருவினுல் கூட்டப்பட்டு, கவியரசி சரோ ஜினியின் தலைமையில் நடை பெற்ற ஆசிய உறவு மாநாட்டில், அகிலமலேய தொழிலாளர்களின் ஏகப் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். ஏகாதிபத்திய நாடு களின் சுரண்டலுக்குள்ளாகி சகிக்க முடியாத கொடுமைகளை அனுபவிக்கும் மலேயா தொழி லாளர்களின் நிலைமையை அங்கு உணர்ச்சியோடு எடுத்துக் கூறி ஞர். அதனுல் இந்தியத் தலைவர் களின் நன்மதிப்பும் கணப திக்குக் கிடைத்தது. அந்தச் சமயத்தில்தான் தன்னைப் பெற் றெடுத்த தமிழகத்திற்கும் வந்து போகும் வாய்ப்பு கணபதிக்குக் கிடைத்தது.

மீண்டும் மலேயா சென்ற கணபதி, மலேயா தொழிற் சங்கத்தின் சார்பாக "பாட்டாளி முரசு" என்னும் தமிழ் வாரப் பத்திரிகையை ஆரம்பித்தார். இதற்குள் மலேயாவில் உள் நாட்டுப் புரட்சி கிளப்பிவிடவே, நாட்டில் ராணுவ ஆட்சி ஆரம்ப மாயிற்று. தொழிற் சங்கங்கள் சட்ட விரோதமாக்கப்பட்டன. இதனுல் கணபதியும் அவரது தோழர்களும் தலைமறைவாக வாழலாயினர்.

பிரிட்டிஷ் ரப்பர் தோட்ட முதலாளிகளின் கொடுமைகள் வலுப்பெற்றன. ஆசிய நாடுகளை விட்டு அந்நிய ஏகாதி பத்திய வெறியர்கள் வெளியேற வேண்டுமென்ற நேருவின் கருத்துக்கு எதிராக, அங்கிருந்து இந்திய, சீனத் தொழிலாளர் களை வெளியேற்றப்பட்டனர்! மேலும், அங்கு ஏகாதிபத்திய நாடுகள் ஆதிக்க ஆட்சி புரி வதற்கான அடக்கு முறைகள் வளர்ந்தோங்கின.

இந்தச் சூழ்நிலையில்தான் கணபதி மனம் சோர்ந்து கால் களைத்து "ரவாங் வாட்டர் பால்ஸ்" என்னும் எஸ்டேட்டில் ஒரு ரப்பர் மரத்தடியில் உட்கார்ந்திருந்தார். அச்சமயம் அந்த எஸ்டேட்டின் மானேஜ ரான சைமன் என்ற ஆங்கிலே யன் 15 ஆயுதப் போலீசாருடன் சூழ்ந்து கணபதியைப் பிடித் தான்.

இவ்வாறு கடந்த மார்ச்சு மாதம் முதல் தேதி கைது செய்யப்பட்ட கணபதிக்கு, மலேயா ராணுவ 'நீதி மன்றம்' மார்ச் 15ந் தேதிக்குள் மரண தண்டனை விதித்து விட்டது! பதினைந்தே நாட்களுக்குள்- அதுவும் அவசர ஆட்சி நடத்தும் ஒரு ராணுவ நீதி மன்றம் - இத் தகைய தீர்ப்பை அளித்திருக்கிற தென்றுல், கணபதியின் மீதுள்ள வழக்கை எவ்வளவு நிதான புத்தியுடன் விசாரணை செய் திருக்குமென்பது ஆராய வேண்டிய விஷயம்.

ஏகாதிபத்திய வல்லரசுகள், தமது அடிமை நாடுகளில் நடத்திவரும் அடக்கு முறைக் கொடுமைகளுக்கு கணபதியின் முடிவு ஒரு சரியான எடுத்துக் காட்டு! இதை ஒவ்வொரு

தமிழனும் வேதனையோடு சிந்திக்க வேண்டும். தமிழகத்தில் சுதந்தரத் தமிழரசு இருந்திருந்தால், வீரத்தமிழனை கணபதிக்கு மரணதண்டனை விதிதிருப்பதைக் கேட்டு வாளாவிருக்குமா?

மார்ச் 23ந் தேதி காமன்ஸ் சபையில் இதுபற்றி எழுந்த ஒரு கேள்விக்கு, "ஒரு கைத்துப்பாக்கியையும் 6 ரவுண்டு வெடிமருந்தையும் வைத்திருந்த குற்றத்திற்காகவே மரண தண்டனை விதிக்கப் பட்டது" என்று காலனி நாடுகளின் மந்திரியான கிரீச் ஜோன்ஸ் பதிலளித்திருக்கிறார்! இதில் எவ்வளவு உண்மையும் நியாயமும் இருக்கிறதென்பது மர்மமாகவே உள்ளது.

தொழிற் சங்க சம்மேளனத்தின் முன்னாள் தலைவராக இருந்தார் என்பதற்கான கண்ணோட்டத்தில் கணபதிக்கு மரண தண்டனை விதிப்பது சரியல்லவென்றும், நியாயம் என்ன என்பதை விளக்கவேண்டுமென்றும் "இந்து", "தினமணி" முதலிய தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் தலையங்கம் தீட்டியுள்ளன. கணபதிக்கு நீதி கிடைப்பதற்காக — பொறுப்பெடுத்துக் கொள்ள வேண்டுமென்று தூண்டுவதற்காக-அவர் பிறந்த வட்டாரத்தைச் சேர்ந்த திருத்துறைப்பூண்டி, முத்துப்பேட்டை வாசிகள் சிலர் இந்திய அரசாங்கத்திடம் தூது சென்றிருக்கின்றனர்.

ஏகாதிபத்திய வாதிகளின் ஆதிக்க வெறிக்குப் பலியாகவிருக்கும் ஒரு தமிழனை (கணபதியை) காப்பதற்கு அவர் பிறந்த வட்டாரத்து மக்கள் மட்டுமே முன்வந்திருப்பது தமிழ் இனத்திற்குப் பெருமையாகாது. தமிழ் நாட்டார் அனைவருமே இந்த முயற்சியில் பொறுப்புடன் ஈடுபடவேண்டும். தமிழ் நாட்டுப் பத்திரிகைகளனைத்தும் இதுபற்றி எழுதவேண்டும். சென்னை அரசாங்கத்தையும், இந்திய — மத்திய அரசாங்கத்தையும் கணபதிக்காக அக்கறை கொள்ளும்படி தூண்டவேண்டும்.

இந்தச் சமயத்தில் மலேயா செல்லவிருக்கும் நமது தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் காமராஜருக்கும் தலையாய கடமை இதில் உண்டு. அவர் தமது பதவியின் பொறுப்பை உணர்ந்து, தமிழினத்தின் வீர இளைஞனை கணபதியின் உயிரைக் காக்க ஆவன செய்ய வேண்டும்.

---

# பெண்மைக்கு மதிப்பு

(டாக்டர் மு. வரதராசனார்)



எந்த நாட்டில் பெண்மைக்கு மதிப்பும் பெருமையும் இருக்கின்றனவோ, அந்த நாடு முன்னேற்றம் பெற்ற நாடு ஆகும். பெண்மைக்குச் சிறுமையும் இழிவும் கற்பிக்கும் நாடு, அடிமை நாடு அல்லது பிற்போக்கான நாடு ஆகும். உலக வரலாற்றில் இதைக் காணலாம். ஒரே நாட்டை எடுத்துக்கொண்டு ஆராய்ந்தாலும், அது உயர்ந்தோங்கியிருந்த காலம் இன்னது என்று கண்டால், அந்தக் காலத்தில் பெண் மக்களின் நிலையும் உயர்ந்திருந்ததை ஆராயலாம். தமிழ் நாட்டின் வரலாறும் இதற்கு நல்ல சான்றாக இருக்கின்றது.

சங்க காலம் என்று கூறப்படும் காலத்தில்—அதாவது, கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலத்தில்—தமிழ்நாடு அரசியல், சமூக இயல், வாணிகம் முதலான பல துறைகளிலும் முற்போக்கு அடைந்திருந்தது. அந்தக் காலத்து இலக்கியங்களை ஆராய்ந்தால், அப்போது பெண்மக்கள் நன்கு மதிக்கப்பட்டிருந்த உண்மையும் காணலாம். அப்போது தோன்றிய புலவர்களில் முப்பதின்மருக்கு மேல் பெண் புலவர்கள் இருந்திருக்கின்றனர். வேற்றரசரிடம் தூது செல்லக்கூடிய அளவிற்குத் தொண்டு செய்த ஔவையார் போன்ற பெண் புலவர்களும் அக்காலத்தில் வாழ்ந்திருந்தனர். பூதப் பாண்டியன் தேவியைப் போல் அரச குடும்பத்தைச் சார்ந்த பெண்கள் புலமை நிறைந்தவர்களாக விளங்கியதையும் அறிகின்றோம். இசைக் கலையிலும் நடனக் கலையிலும் வல்ல பெண்கள் ஊர்தோறும் பலர் இருந்ததாகவும் அறிகின்றோம். இவ்வாறே பற்பல துறைகளிலும் பெண்கள் ஆண்களோடு நிகரான திறமும் அறிவும் ஆற்றலும் பெற்று விளங்கியதை அறிகின்றோம்.

சமூகத்தில் பெண்கள் பெற்றுள்ள நிலைமையை ஆராய்வதற்கு, பெரும் புலவர்களாகவும் செல்வாக்குள்ளவர்களாகவும் விளங்கும் பெண்கள் சிலரைப் பற்றி மட்டும் அறிந்தால் போதாது. பெண்கள் அடிமைகளாக நடத்தப்படும் கூட்டத்தினரிடையிலும் இரண்டொரு பெண் அறிவாலோ ஆற்றலாலோ சிறந்து விளங்க முடியும். அத்தகையவர் ஒரு சிலரைப்

பார்த்து, அதனால் பொதுவாகப் பெண்ணினம் உயர்நிலை பெற்றிருப்பதாகக் கூறுவது பொருந்தாது. இலக்கியங்களில் ஆராயும் போதும் அவ்வாறே உண்மை அறிய வேண்டும். அங்கொரு புலவரும் இங்கொரு கோப்பெருந் தேவியும் கண்டு, இன்ன காலத்தில் இந்த நாடு பெண்ணுரிமையோடு சிறப்புற்றிருந்தது எனக் கூறாமல், மக்களின் வாழ்க்கையைப் பொதுவாக ஆராய்ந்தே கூறவேண்டும். அங்கும், தாயிடம் மகன் பழகுவது, தமக்கையிடம் தங்கை பழகுவது, அறிந்தோர் ஒருவர் மற்றொருவரிடம் பழகுவது முதலியவற்றை அறிவதால் ஒரு சிறிது உண்மை விளங்கலாம். பழகிய காரணத்தால் ஒரு தனிமதிப்பு ஏற்பட்டு, அதனால் இழிந்த மனப்பான்மை மறைந்திருக்கலாம். ஆகையால், முன் பழகாத ஒரு பெண்ணிடம் மற்றவர்கள் நடந்துகொள்ளும் முறையைக் கொண்டும், அதனால் நாட்டின் நிலைமையை அளந்தறிவது பொருத்தமுடையதாகும்.

பழங்காலத்துத் தமிழ்ப் பாடல்களில் இவ்வாறு ஆராய்ச்சி செய்வதற்குப் போதிய இடம் இருக்கிறது. எடுத்துக் காட்டாக, பத்துப் பாட்டு என்னும் நூலில் ஒரு பகுதியாக உள்ள குறிஞ்சிப் பாட்டு என்னும் பாடலை ஆராயலாம்.

இளமையும் வளமையும் வாய்த்த ஒருவன் வேட்டை மேற்கொண்டு ஒரு மலையில் இங்கும் அங்கும் சென்று வருகின்றான். வேட்டை நாய்கள் அவனைச் சூழ்ந்து தொடர்ந்து வருகின்றன. ஏதோ ஒரு விலங்கு அவனுடைய கண்ணிற் படுகின்றது. அதை விடாமல் துரத்திச் சென்று அம்பு எய்கின்றான். நாய்களும் துரத்துகின்றன; அவனும் தொடர்ந்து செல்கின்றான்; ஆயினும் அவனுடைய அம்பின் குறிக்குத் தப்பி அந்த விலங்கு எப்படியோ ஓடிவிடுகின்றது. இங்கும் அங்கும் பார்த்துக் கொண்டே அதைத் தேடி வருகின்றான். அப்போது அவ்வழில் ஓர் அசோக மரத்தின் குளிர்ந்த நிழலில் மகளிர் இருவர் பல வகை மலர்களைக் கொய்து மாலைகளாகக் கட்டிச் சூடிக் கொண்டும் தழையாடை அமைத்து உடுத்துக் கொண்டும் மகிழ்ச்சியாகப் பொழுது போக்கிக் கொண்டே தினைப்புனத்தைக் காவல் காத்து வருகின்றனர்.

விலங்கைத் தேடி அம்பும் கையுமாக வரும் வீரனை அந்த மகளிர் காண்பதற்கு முன்னே, வேட்டை நாய்கள் அவர்களை நெருங்குகின்றன. கூரிய பற்களும் சினத்தோடு உருத்து நோக்கும் கண்களும் உடைய பொல்லாத வேட்டைநாய்கள் நெருங்கியதும், இளம் பெண்கள் இருவரும் எழுந்து அஞ்சி நடுங்குகின்றனர்; கலங்கி ஓடுகின்றனர்; வேறோர் இடத்திற்குச் சென்று நடுங்கி நிற்கின்றனர். நாய்களைப் பின்

தொடர்ந்து வந்த வீரன் அவர்களின் நடுக்கத்தைக் கண்டதும் வருந்துகின்றான்; "என்ன துன்பம் இழைத்தோம்!" என்று அஞ்சுகின்றான். அவர்களுடைய நடுக்கமும் கலக்கமும் தீருமாறு மெல்லிய இனிய சொற்களை விரும்பத் தக்க வகையில் கூறுகின்றான். "இங்கு வந்த காரணம் ஒன்று; நான் துரத்தி வந்த விலங்கு ஒன்று அகப்படவில்லை. இந்த வழியாகப் போயிருக்கும் என்று எண்ணி வந்தேன். உங்களைத் துன்புறுத்தும் நோக்கமே இல்லாமல் இவ்வாறு நடுங்கச் செய்து விட்டேனே" என்கின்றான்.

இளம் பெண்கள் இருவரும் வாய்திறக்கவில்லை. ஆடவனோ புதியவன்; ஆதலின் அவர்கள் நடுக்கம் ஒருவகையாகத் தீர்ந்த பிறகும் பேச வாய் திறக்கவில்லை. அவர்கள் பேசாமை கண்ட வீரன் மனம் நொந்து வருந்துகின்றான். "வந்த விலங்கைக் காட்டிக் கொடுக்காமல் போனாலும் போகட்டும்; என்னோடு வாய்திறந்து பேசக் கூடாதோ? அதுவும் ஒரு குற்றமோ? நான் உங்களை அவ்வளவு வருத்தி விட்டேனோ" என்கின்றான்.

அவன் இவ்வாறு அமைதியாக வினவும் போது, அவனுடைய நாய்களோ தம் இயல்பான போக்கில் இங்கும் அங்கும் சுற்றிச் சுற்றிக் குரைக்கின்றன. அவற்றைக் கொம்பு கொண்டு ஓச்சி அடக்குகின்றான். நாய்கள் அடங்கி அமைதியாக நிற்கின்றன. உடனே பெண்களின் முகத்தை நோக்கி, அவர்கள் ஏதேனும் விடை கூறுவார்கள் எனக் காத்து நிற்கின்றான்.

> உரவுச் சினஞ் செருக்கித்
> துன்னுதொறும் வெகுளும்
> முளைவாள் எயிற்ற
> வள்ளுகிர் ஞமலி
> திளையாக் கண்ண
> வளைகுபு நெரிதர
> நடுங்குவனம் எழுந்து
> நல்லடி தளர்ந்து யாம்
> இடும்பைகூர் மனத்தே
> மருண்டுபுலம் படர
> ...அணிபெற வந்தெம்
> அலமரல் ஆயிடை
> வெரூஉதல் அஞ்சி
> மெல்லிய இனிய
> மேவரக் கிளந்து...
> ....................இறந்த
> கெடுதியும் உடையேன்
> என்றனன் அதனெதிர்
> சொல்லேம் ஆதலின்
> அல்லாந்து கலங்கிக்
> கெடுதியும் விடஇ
> ராயின் எம்மொடு
> சொல்லலும் பழியோ
> மெல்லிய லீர் என...
> ......வீறுபெற ஓச்சிக்
> கல்லென் சுற்றக்
> கடுங்குரல் அவித்து எம்
> சொல்லல் பாணி
> நின்றனனாக...
>
> —கபிலர், குறிஞ்சிப்பாட்டு.

இது கற்பனையான காட்சியே; இலக்கியப் பகுதிகளில் வருவன பெரும்பாலும் கற்பனையாகவே

இருப்பவை; ஆயினும் வாழ்க்கையில் இல்லாதவற்றைக் கூறும் பகுதிகள் வேறு; இருப்பவற்றையே தக்கவாறு அமைத்து விளக்கும் பகுதிகள் வேறு. இங்கே கபிலர் பாட்டு, அக்காலத்துக் தமிழ்நாட்டுப் பண்பைத் தமிழ்மரபை ஒட்டி ஆரிய அரசன் பிரகத்தன் என்பவனுக்கு விளக்க எழுந்த பாட்டாகும். ஆகையால் அக்காலத்துத் தமிழ்நாட்டில் வாழ்ந்த ஆண் மக்கள் பெண்பாலாரிடம் பொதுவாக எவ்வாறு நடந்து வந்தனர் என்பதை அறிய இது பயன்படும்.

இங்குக் காணும் வீரன் பிறகு காதலனாக மாறுகின்றான்; மகளிரில் ஒருத்தி அவனுடைய காதலியாக மாறுகின்றாள். ஆயினும், முதலில் கண்டபோது அவனும் அவளும் காதலர் அல்லர். ஆதலின், இப்பகுதியில் அவன் அவர்களிடம் நடந்து கொண்ட முறை, பொதுவாகப் பழந்தமிழ் நாட்டில், ஆண்மக்கள் பழக்கமில்லாத பெண்களிடம் நடந்து கொண்ட பொதுமுறையே ஆகும்.

பெண்கள் நடுக்கத்தைக் கண்டு ஆண் அஞ்சுதல், வருந்துதல், அவர்களுக்குத் தன்னை அறியாமல் இழைத்த தீங்கை நினைத்துக் கலங்குதல், அவர்கள் பேச இடந்தருதல், பேசும் வரையில் காத்து நிற்றல் ஆகிய இந்த நல்ல பண்புகளை இங்குக் காணலாம்.

---

ஆசிரியர், வெளியிடுபவர்: ம. பொ. சிவஞானம்,
1-29, இருசப்பகிராமணி தெரு, திருவல்லிக்கேணி
அச்சிட்டவர்: தி. கண்ணபிரான், ஜெயா அண்டு கம்பெனி,
582/588 ... ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை.

